# குலசை உலா








மகாமகோபாத்தியாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

திருவான்மியூர் : : சென்னை—41

1972

# குலசை உலா



மகாமகோபாத்தியாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

திருவான்மியூர் சென்னை—41

1972

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் எத்தனையோ வகையான காலப் பகுதிகள் உண்டு. தமிழகத்தின் பொற்காலம் என்று கூறப்பெறும் சங்ககாலத்தில் பல பல பாடல்களைப் புலவர்கள் இயற்றினார்கள். தொல்காப்பியத்தில் உள்ள இலக்கணத்தைக் கொண்டு, அவ் விலக்கணம் அமைந்த நூல்கள் பல முன்பு இருந் திருக்கவேண்டும் என்று புலனாகும். அவ்வாறு உய்த்துணரும் போது, இப்போது காப்பியம் என்று வழங்கும் தொடர்நிலைச் செய்யுட்களும் அவையல்லாத தனிநிலைச் செய்யுட்களும் பழங் காலத்தில் வழங்கி வந்தன என்று தெரியவரும். அவை யாவும், இப்போது கிடைக்கவில்லை. பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்று வரிசைப்படுத்திக் கூறப்பெறும் முப்பத்தாறு நூல்களை இன்று சங்கம் மருவிய நூல்கள் என்று கூறுவர். பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் அத்தனையும் சங்க காலத்துக்குரியன அல்ல என்று ஆராய்ச்சியாளர் கருதுவர். எனினும் அவை பழைய நூல்கள் என்று சொல்வதற்குத் தடை இல்லை.

இந்த முப்பத்தாறு நூல்களில் பொருள்தொடர்நிலைச் செய்யு ளாகிய காப்பியம் ஏதும் இல்லை. சங்ககாலத்தில் இராமாயணம், பாரதம், தகடூர் யாத்திரை முதலிய தொடர்நிலைச் செய்யுட்கள் இருந்தன என்பது அந் நூல்களிலிருந்து மேற்கோளாகக் காட்டப் பெறும் சில செய்யுட்களால் அறியக் கிடக்கிறது. இன்று வழங்கும் பழைய தொகை நூல்கள் அகம், புறம் என்னும் இரு வேறு பகுதிக்குள் அமைந்தவை, பத்துப் பாட்டில் நெடும் பாட்டுக்கள் உள்ளன. எட்டுத் தொகையில் தனிப் பாடல்கள் உள்ளன.

சங்க காலத்தை அடுத்துச் சிலப்பதிகாரம் முதலிய காப்பி யங்கள் எழுந்தன. பிறகு ஏழாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் சைவ சமயமும் வைணவ சமயமும் சிறப்புப் பெற்று மக்களின் வாழ்விலுள்ள பல துறைகளிலும் தம் மணத்தைப் பரப்பின. கோயில்களின் பெருமை மிகுதியாயிற்று. தேவாரப் பதிகங்களை மக்கள் பக்தியோடு பாடினார்கள்; கேட்டார்கள். நாளடைவில் தலங்களுக்கு மதிப்பு உயர்ந்தது.

இதன் பயனாகத் தல வரலாறுகளாகிய புராணங்கள் எழுந்தன; தலங்களைப் பற்றிய பிரபந்தங்கள் உண்டாயின. பிற்காலத்தில் தோன்றிய புலவர்கள் பலர் இத்தகைய புராணங்களையும் பிரபந்தங்களையும் இயற்றியே புகழ் பெற்றிருக்கிறார்கள். பிரபந்தங்கள் என்று பெயர் பெறும் சிறு நூல்கள் தமிழில் பிற்காலத்தில் நூற்றுக்கணக்கில் தோன்றின. பழங்காலத்தில் தோன்றின பிரபந்தம் ஆற்றுப்படை. அதற்குரிய இலக்கணம் தொல்காப்பியத்தில் இருக்கிறது. தொகை நூலாகிய பத்துப் பாட்டில் ஐந்து பாட்டுக்கள் ஆற்றுப்படைகளாக உள்ளன. அவை திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படை (மலைபடுகடாம்) என்பவை. பரணி, கோவை, உலா, தூது, கலம்பகம், பிள்ளைத் தமிழ் என்று பிற்காலத்தில் தோன்றிய பிரபந்தங்கள் பல.

பிரபந்தங்களின் இலக்கணங்களைக் கூறும் நூல்களைப் பாட்டியல்கள் என்று சொல்வார்கள். பன்னிரு பாட்டியல் முதல் இலக்கண விளக்கப் பாட்டியல் வரையில் பல பாட்டியல்கள் உள்ளன. அவற்றில் உள்ள பிரபந்தங்களின் எண்ணிக்கை ஒரே அளவில் இல்லை. பொதுவாகத் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்கள் என்று ஒரு வழக்காறு இருக்கிறது. சிவந்தெழுந்த பல்லவராயன் உலாவில், "தொண்ணூற்றாறு கோலப் பிரபந்தங்கள்" என்று வருகிறது. பிரபந்த மரபியல், "பிள்ளைக் கவி முதல் புராணம் ஈறாத், தொண்ணூற் றாறெனும் தொகையதாம்" என்று கூறுகிறது. பிரபந்தத் திரட்டு என்ற இலக்கண நூலின் காப்புச் செய்யுள்,

"தொண்ணூற்றா றான தொகைசேர் பிரபந்தம்
பண்ணூறப் பாடும்வகை பாடுதற்கு—நண்ணுதுணை
தொந்திவயிற் றன்சிவன்சேய் சுப்பிரமண் யன்றுணைவன்
ஐந்துகரத் தன்பொன் னடி"

என்பது. இதிலும் தொண்ணூற்றாறு என்ற தொகை வருகிறது. எனினும் பல பாட்டியல்களில் அந்தத் தொகையினும் குறைவான பிரபந்தங்களின் இலக்கணங்களே உள்ளன.

பாட்டியல்களில் கூறப்பெறும் இலக்கணம் எல்லாவற்றிற்கும் உரிய இலக்கியங்கள் கிடைக்கவில்லை. பிரபந்தத் திரட்டு என்ற நூலில் வேறு பாட்டியல்களில் இல்லாத துனிவிசித்திரம், லட்சுமி விலாசம், கூடன்மாலை, குலோதய மாலை முதலிய பிரபந்தங்களுக்குரிய இலக்கணங்கள் இருக்கின்றன. அத்தகைய பிரபந்தங்கள் தமிழில் வழங்கினவா என்பதே ஆராய்ச்சிக்குரியது.

சில பிரபந்தங்கள் தமிழில் மிகுதியாகத் தோன்றிப் பெருகின. கோவை, பிள்ளைத் தமிழ், உலா, தூது, அந்தாதி, கலம்பகம் போன்றவை எல்லாப் பாட்டியல்களிலும் சொல்லப் பெறுகின்றன. அவ்வாறு புலவர் பெருமக்களால் பாடப்பெறும் சிறப்பான பிரபந்தங்களில் ஒன்று உலா.

தலைமைத் தன்மை உடையவர்கள் உலா வருதல் இயல்பு. மன்னர்கள் உலா வருவதும் அவ்வுலாவைக் கண்டு மக்கள் களிப்பதும் இலக்கியங்களில் சுவையுடன் வருணிக்கப்பெறும் பகுதிகள். பெருங்கதை, சீவக சிந்தாமணி, கம்ப ராமாயணம் முதலிய காப்பியங்களில் காப்பிய நாயகர்கள் உலா வரும் சிறப்பைப் புலவர்கள் அழகாகப் பாடியிருக்கக் காணலாம். திருக்கோயில் களில் உலாப் போதுவதற்காகவே உற்சவமூர்த்திகள் அமைந் திருப்பதையும், வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு மூர்த்திகள் தனியாகவும் வாகனத்திலும் உலா வருவதையும் காணலாம்.

இவ்வாறு உலா வருவதைச் சிறப்பித்துத் தனி நூலாகப் பாடும் வழக்கம் புலவர் பெருமக்களால் மேற்கொள்ளப் பெற்றது. அந்த நூல்கள் உலா என்ற பெயரைப் பெற்றன. உலாப்புறம், உலாமாலை என்ற பெயர்களும் அமைந்தன.

தொல்காப்பியத்தில் பாடாண் திணையைப் பற்றிய இலக்கணப் பகுதியில்,

"ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப
வழக்கொடு சிவணிய வகைமை யான" (புறத். 30)

என்ற சூத்திரம் வருகிறது. அதன் உரையில் நச்சினார்க்கினியர், 'பக்கு நின்ற காமம் ஊரிற் பொது மகளிரோடு கூடி வந்த விளக்கமும் பாடாண் திணைக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர்; அது பின்னுள்ளோர் ஏழு பருவமாகப் பகுத்துக் கலிவெண்பாட் டாகச் செய்யும் உலாச் செய்யுளாம்' என்று எழுதுகிறார். ஆகவே, சிறந்த ஒருவன் ஊரில் உலாப் போதும் சிறப்பைப் பாடும் வழக்குப் பழமையானது என்றும், அதை ஒட்டியே உலா எழுந்திருக்க வேண்டுமென்றும் தெரிய வருகிறது.

உலா வரும் தலைவனைப் பலரும் கண்டு இன்புற்றாலும், சிறப்பாக மகளிர் கண்டு பாராட்டுவதாகச் சொல்வது பாட்டுடைத் தலை வனுடைய ஏற்றத்தைக் காட்டும்.

"மண்தேய்த்த புகழினான் மதிமுக மடவார்தம்
பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்
கண்டேத்தும் செவ்வேளென் றிசைபோக்கிக் காதலால்
கொண்டேத்தும் கிழமையான் கோவலனென்
பான்மன்னோ!"

என்று கோவலனை மடவார் கண்டு ஏத்தும் சிறப்பைப் பாடுகிறார் இளங்கோவடிகள். இவ்வாறு கண்டு பாராட்டும் மகளிரில் சிறப்பாக ஏழு பருவ மகளிர் அவன் அழகிலும் பிறவற்றிலும் ஈடு பட்டார் என்று சொல்வதும் காப்பிய மரபு.

"பேதைமார் முதல்கடைப் பேரிளம் பெண்கடாம்
ஏதியார் மாரவேள் ஏவவந் தெய்தினார்
ஆதிவா னவர்பிரான் அணுகலால் அணிகொள்கார்
ஓதியார் வீதிவாய் உற்றவா றுரைசெய்வாம்"
(எதிர்கோட். 34)

என்பது கம்பராமாயணம். பெருங்கதையில் நகர் வலங் கொண்டது என்ற பகுதியும், கம்பராமாயணத்தில் உலாவியற் படலம் என்ற பகுதியும் தலைவர்களின் உலாச் சிறப்பைத் தனியே விரித்துரைக்கின்றன.

உலாப் பிரபந்தத்தில் தலைவன் தன்னை அணிந்து கொண்டு உலாப் புறப்படுவதும், அவனுடன் பலர் வருவதும், அந்தக் காட்சியைக் கண்டு மகளிர் குழாங்கள் ஈடுபட்டு மயல் கொள்வதும், பேதை முதலிய ஏழு பருவ மாதர்கள் தனித்தனியே தலைவனைக் கண்டு தம் தம் இயல்புக்கு ஏற்ப மால் கொள்வதும் விரிவாகச் சொல்லப் பெறும்.

உலாவின் பொருளமைப்புப்படி மூன்று வேறு பகுதிகளாக அதைப் பிரிக்கலாம். தலைவன் சிறப்பு, அவன் அணி செய்து கொள்ளுதல், உலாப் புறப்படல், அவனுடன் பலர் வருதல் என்பன முதற் பகுதி. அவனைக் கண்டு பொதுவாகப் பல மகளிர் காமுறுதல் இரண்டாம் பகுதி. ஏழு பருவ மகளிர் தனித் தனியே காமுறுதல் மூன்றாம் பகுதி. இவற்றில் மூன்றாம் பகுதியே மிக விரிவாக அமையும்.

இவற்றில் முன் இரண்டு பகுதிகளையும் முதல் நிலையாகவும் மூன்றாவது பகுதியை ஏழு நிலையாகவும் வகுத்துக் கூறுகிறது பன்னிரு பாட்டியல் என்னும் பிரபந்த இலக்கணம்.

"குடிநெறி மரபு கொளல்கொடை விடியல்
நன்னீ ராடல் நல்லணி அணிதல்
தொன்னகர் எதிர்கொளல் நன்னெறி வீதியின்
மதகளி றூர்தல் முதல்நிலை ஆகும்"

"ஆதி நிலையே குழாங்கொளல் என்றெடுத்
தோதிய புலவரும் உளரென மொழிப"

"ஏழு நிலையும் இயம்பும் காலை
பேதை பெதும்பை மங்கை மடந்தை
அரிவை தெரிவை பேரிளம் பெண்ணெனப்
பாற்படு மகளிர் பருவத் தாதல்
நோக்கி உரைப்பது நுண்ணியோர் கடனே"

(பன்னிரு. 133-5)

என்பவற்றைக் காண்க.

தலைவனைக் கண்டு காமுறும் பெண்களின் பருவத்துக்குரிய ஆண்டுகள் வருமாறு: 5 முதல் 8 வரையில் பேதைப் பருவம்; 9 முதல் 10 வரை பெதும்பை; 11 முதல் 14 வரை மங்கை; 15 முதல் 18 வரை மடந்தை; 19 முதல் 24 வரை அரிவை; 25 முதல் 29 வரை தெரிவை; 30 முதல் 36 வரையில் பேரிளம் பெண். இந்த ஆண்டுக் கணக்கில் சில வேறுபாடுகள் வேறு பாட்டியல் நூல்களில் காணப்படுகின்றன. பெருங்கதையில் நீராட்டரவம் என்னும் பகுதியில் இந்த எழுவகை மகளிரின் தோற்றமும் செய்கையும் விரிவாக உள்ளன. இப்பருவ மகளிரைப் பற்றி டாக்டர் ஐயரவர்கள் எழுதியுள்ள கருத்துக்கள் இங்கே பயன்படும்:

'இப் பருவங்களுக்குரிய காலவரையறை பலவிதமாகக் காணப்படுகின்றது. ஆயினும், உலகியலை அறியாத இளம் பருவம் பேதைப் பருவமென்றும், உலகியலை ஒருவாறு உணர்ந்தும் உணராமலும் உள்ள நிலை பெதும்பைப் பருவமென்றும், காம நுகர்ச்சிக்கு ஏற்புடையது மங்கைப் பருவமென்றும், அந் நுகர்ச்சியில் பயின்றது மடந்தைப் பருவமென்றும், முதிர்ந்தது அரிவைப் பருவமென்றும், மகப்பேற்றையுடைய நிலை தெரிவைப் பருவமென்றும், காம உணர்ச்சி தளரும் நிலை பேரிளம் பருவமென்றும் ஒருவாறு அவற்றின் இயல்புகளைக் கூறலாகும்.' *

அந்த அந்தப் பருவ மகளிரை வருணிக்கும்போது அவரவர்களுக்கு இயைந்த ஆடல்களைப் பயில்வதாக அமைத்தல் மரபு.

---

* திருக்கழுக்குன்றத்து உலா, முகவுரை.

"சிற்றில் பாவை கழங்கம் மனையே
பொற்புறு மூசல் பைங்கிளி யாழே
பைம்புன லாட்டே பொழில்விளை யாட்டே
நன்மது நுகர்தல் இன்ன பிறவும்
அவரவர்க் குரிய ஆகும் என்ப" (137)

என்று பன்னிரு பாட்டியல் சொல்கின்றது. இந்தச் சூத்திரத்தில் சொல்லப்படுவன அல்லாத வேறு ஆடல்களையும் சில உலாக்களில் காணலாகும்.

இவ்வாறு தலைவனைக் கண்டு மயலுறும் பெண்கள் கற்புடை மகளிர் அல்லர், பரத்தையர் என்பது உளங்கொள்வதற்குரியது. "ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தின் உரையில் நச்சினார்க்கினியர், 'ஊரிற் பொது மகளிரோடு கூடிவந்த விளக்கம்' என்று குறிக்கிறார். பெருங்கதையில் உதயணன் உலா வந்தபொழுது காமுற்றவர்கள் உத்தம மகளிர் அல்லாத பொதுமகளிர் என்று கொங்குவேளிர் பாடுகின்றார்.

"ஞாலந் திரியா நன்னிறைத் திண்கோள்
உத்தம மகளிர் ஒழிய மற்றைக்
கன்னிய ரெல்லாம் காமன் துரந்த
கணையுளங் கழியக் கவினழி வெய்தி."

(நகர்வலம் கொண்டது, 53-6.)

சீவகசிந்தாமணியில், சீவகன் உலா வந்தபோது பல மகளிர் ஓடிவந்து கூடியதாகப் பாடுகிறார் திருத்தக்கதேவர்.

"இன்னமு தனைய செவ்வாய் இளங்கிளி மழலை யஞ்சொற்
பொன்னவிர் சுணங்கு பூத்த பொங்கிள முலையி னார்தம்
மின்னிவர் நுசுப்பு நோவ விடலையைக் காண ஓடி
அன்னமும் மயிலும் போல அணிநகர் வீதி கொண்டார்"

(கோவிந்தையார் இலம்பகம், 49)

என்பது பாட்டு. இதன் உரையில் நச்சினார்க்கினியர், 'இது, கற்புடைமகளிர் ஒழிந்தோரைக் கூறிற்று' என்று எழுதியுள்ளார்.

மன்னர் முதலிய வள்ளல்களின்மீதும், ஆசிரியர்மீதும், இறைவன்மீதும் உலாப் பாடுவது மரபு. மூவருலா, மூன்று சோழ மன்னர்களை அவர்களுடைய அவைக்களப் புலவராக இருந்த

ஒட்டக்கூத்தர் பாடியவை; அவை முதல் வகைக்கு எடுத்துக்காட்டு. தத்துவராயர் பாடிய ஞானவிநோதன் உலா இரண்டாம் வகைக்கு எடுத்துக்காட்டு; திருக்கைலாய ஞான உலா போன்றவை மூன்றும் வகைக்கு எடுத்துக்காட்டு. பாட்டுடைத் தலைவனைச் சிறப்பிக்கும்போது அவனுடைய தசாங்கத்தைச் சொல்வதுண்டு. கலிவெண்பாவினால் பாடப்பெறுவது இப் பிரபந்தம்.

"பேதைமுதல் ஏழ்பருவப் பெண்கள் மயக்கமுற
ஓதுமறு குற்றனைவேலோனென்—றேதம்
அறக்கலி வெண்பாவின் ஆக்கல் உலாவாம்
புறத்தசாங் கம்தாங்கிப் போற்று"

என்று பிரபந்தத் திரட்டில் வரும் வெண்பா இவற்றைச் சொல்கிறது.

பாட்டுடைத் தலைவன் யானையேறி வருவதாகவும் பிற வாகனங்களில் ஏறி வருவதாகவும் கூறுவது மரபு. மூவருலாவில் மன்னர்கள் களிற்றின்மீது வந்ததாகப் பாடுகிறார் ஒட்டக்கூத்தர். சேரமான் பெருமாள் நாயனார் பாடிய ஆதி உலாவில் இறைவன் விடையின்மேல் எழுந்தருளியதாகவும், சொக்கநாதர் உலாவில் ஏழு நாளில் ஏழு வேறு ஊர்தியில் எழுந்தருளியதாகவும், தல சம்பந்தமான பெரும்பான்மை உலாக்களில் திருத்தேரில் வந்ததாகவும் புலவர்கள் பாடியிருக்கிறார்கள்.

## 2

குலசை உலா என்பது தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் திருச்செந்தூருக்குத் தெற்கே உள்ள குலசேகரப் பட்டினத்தில் எழுந்தருளியுள்ள கச்சிகொண்ட பாண்டீசுவரர்மேல் பாடியது. குலசேகரன் பட்டினம் என்றபெயரே குலசை என்று மருவியது. கடற்கரையில் அமைந்த ஊராதலின் பட்டினம் என்ற பெயர் உடையதாயிற்று. இது குலசேகர பாண்டியனால் நிறுவப் பெற்ற ஊர் என்று தோன்றுகிறது. அந்தப் பெயருடைய பாண்டிய மன்னர் ஒருவருக்கு மேல் இருந்திருக்கிறார்கள். இந்த ஊரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுடைய திருநாமமாகிய கச்சிகொண்ட பாண்டீசுவரர் என்பது, கச்சி கொண்ட பாண்டியன் என்னும் மன்னனால் நிறுவப்பெற்ற காரணம் பற்றி உண்டாயிற்று என்று

உய்த்துணரலாம். இந்த ஊரை நிறுவியவனும் இம் மூர்த்தியைத் தாபித்தவனும் ஒருவனே என்று கொள்ள இடம் உண்டு. அவ்வாறு யின் கச்சி கொண்ட பாண்டியன் என்ற சிறப்புப் பெயரை உடைய ஒரு மன்னனே இந்த ஊரையும் கோயிலையும் அமைத்தான் என்று சொல்லலாம். கி. பி. 1268 முதல் 1310 வரையில் ஆட்சி புரிந்த மாறவர்மன் குலசேகர பாண்டியன் என்பவன் காஞ்சிபுரத்தையும் உள்ளிட்ட பெரிய நிலப் பகுதியைத் தன் வசப்படுத்தி ஆண்டான் என்று தெரிய வருகிறது. அந்த மன்னனே இவ்வூரை அமைத்தான் என்று கொண்டால், இந்தத் திருக்கோயில் பதின் மூன்றும் நூற்றுண்டின் இறுதியில் எழுந்தது என்று வரையறை செய்யலாம். இங்கே சிவன் கோயிலில் உள்ள அம்பிகையின் திருநாமம் அறம் வளர்த்த நாயகி. காஞ்சிபுரத்தில் எழுந்தருளி யுள்ள காமாட்சியின் திருநாமங்களில் ஒன்று அது. தான் கச்சியை அடிப்படுத்தித் தனதாகக் கொண்ட வெற்றிக்கு அடையாளமாக இந்தக் கோயிலைக் கட்டி மூர்த்திகளை நிறுவினுன் குலசேகர பாண்டியன் என்று ஒருவாறு ஊகிக்கலாம். இவ்வூர் உள்ள பகுதிக்கு வீரை வளநாடு என்று பெயர்.

இந்த ஊரின் வரலாற்றை இந்த நூல் தெளிவாகக் கூறவில்லை. யாரோ ஒரு பாண்டியன் நிறுவியதாக மட்டும் சொல்கிறது.

"தேராரும் வீதித் திருக்குலசை மாநகரில்
பாராரும் கீர்த்திஒரு பாண்டியன்முன்—ஆராத
ஆசையோ டுந்தவஞ்செய் தன்பாய் அவன்வேண்ட
மாசில்வடி வாயுதித்து வாழ்ந்திருப்போன்"

(கண்ணி, 23-4)

என்ற பகுதியைக் காண்க.

இங்குள்ள இறைவனைப் பாடும்போது இவ்வாசிரியர் காஞ்சி புரத்தில் காமாட்சியின் வளைத் தழும்பும் நகில் தழும்பும் பெற்றவன் என்று பாடுகிறுர். காஞ்சிபுரத்தின் நினைவாக இந்தப் பெரு மானைப் பாண்டிய மன்னன் நிறுவினுன் என்பதை இக்கண்ணிகள் குறிப்பாகப் புலப்படுத்துகின்றன.

"எங்கள் மலைமடந்தை எவ்வுயிரும் பெற்றெடுத்தும்
கொங்கை தளராக் குமரியாள்—பொங்கியசீர்க்
காஞ்சிப் பதியில்அருட் கம்பைத் திருநதியில்
வாஞ்சை மிகுத்து வழிபடவே—ஆஞ்சலமாய்

வெள்ளம் பெருகிவர விம்மி விதிர்விதிர்த்துத்
தள்ள வொழியா ததுகண்டே—உள்ளணைத்துச்
கொள்ளத் திருமலர்க்கைக் கோல வளைத்தழும்பும்
வள்ளத் தனக்குறியும் வைத்திருப்போன்''

(கண்ணிகள், 16-19)

என்பவை அக்கண்ணிகள்.

இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள விநாயகர், கற்பக விநாயகர். இதைக் காப்புச் செய்யுள் உணர்த்துகிறது. சிவபெருமான் திருநாமத்தை,

''தென்குலசைக் கச்சிகொண்ட வீசுரர்'' (காப்பு)
''திருநாமம் கச்சிகொண்ட, பாண்டீசுரனும் பரஞ்சோதி'' (35)
''கச்சிகொண்ட பாண்டீசர்'' (164)
''கச்சிகொண்ட பாண்டீசன்'' (268)

என்பவற்றில் எடுத்துரைக்கிருர் ஆசிரியர். அம்பிகையின் திருநாமத்தை,

''எண்ணுன், கறம்வளர்த்த நாயகிஎன் அம்மை'' (28)
''அறம்வளர்த்த உத்தமி'' (67)

என்பவற்றில் குறிப்பிடுகிருர்.

தலத்தின் பெயர், தென்குலசை (காப்பு), திருக்குலசை (23), குலசை (163), குலசாபுரி (280) என்று பேசப்பெறுகிறது. வீரை வளநாடு இரண்டு கண்ணிகளில் இடம் பெறுகிறது (113, 280). சித்திரை மாதத்தில் இறைவன் பவனி வந்தான் என்று இந்நூல் கூறுகிறது (41).

ஆதி உலாவைப் போல இந்நூலும் இறைவன் இடப வாகனத்தில் எழுந்தருளியதாகச் சொல்கிறது (281).

காப்புச் செய்யுளாகிய வெண்பாவை முதலில் பெற்றுப் பின் 281 கண்ணிகளைக் கொண்டு இலங்குவது இந்தப் பிரபந்தம்.

முதல் 35 கண்ணிகளில் இறைவனுடைய பெருமையும், அதற்கு மேல் 43ஆம் கண்ணி வரையில் இறைவன் பவனிவரத் திருவுள்ளங் கொள்ளுதலும், 54ஆம் கண்ணி வரையில் இறைவன் புனைந்து கொள்ளும் அலங்காரமும், 67 வரையில் அம்பிகை அணிசெய்து கொள்வதும், 70 வரையில் இறைவனும்

இறைவியும் கோயிலுக்கு வெளியே எழுந்தருள்வதும், 71 முதல் 101 வரையில் நந்தி முதலியோர் உடன்வருவதும், 105 வரையில் இசைக் கருவிகள் முழங்குவதும், 111 வரையில் திருச்சின்ன முழக்கமும், 122 வரையில் தசாங்கங்களும் சொல்லப்பெறு கின்றன. மேலே 123 முதல் 150 வரையில் மகளிர்குழாம் இறைவனைத் தரிசித்து மால் கொள்வதையும், அப்பால் உள்ள கண்ணிகளில் பேதை முதலிய ஏழு பருவ மகளிர் செயல்களையும் காணலாம்.

இறைவனுடைய பெருமையைச் சொல்லும் பகுதியில் திருமுறைகளிலும் சாத்திரங்களிலும் உள்ள பல அரிய கருத்துக்களை அமைத்திருக்கிறார் ஆசிரியர்.

**"புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க**
**கரங்குவிவார் உண்மகிழும் கோன்கழல்கள் வெல்க**
**சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க"**

என்ற திருவாசகத்தின் எதிரொலியை,

**"கூப்பும்இரு**
**கையுடையார் உள்ளக் கமலா லயமுடையான்**
**பொய்யுடையார் உள்ளம் புகுதாதான்"** (2-3)

என்ற பகுதியில் காணலாம்.

**"ஏகன் அநேகன் இரண்டற்றகலாத**
**போகம் அளிக்கும் பொருளானோன்"** (கண்ணி, 4)

என்பதில்,

**"ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க."**

என்ற திருவாசக அடிப்பகுதி பதிந்திருக்கிறது. அப்படியே,

**"போக்குவர வில்லாத பூரணத்தன்"** (கண்ணி, 6)

என்பதில்,

**"போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே"**

என்ற சிவபுராண அடி மணக்கிறது.

இறைவன் முக்குணத்தினால் பிரமன் முதலிய மூவரையும் தோற்றுவித்தான் (7), ஐந்தொழிலை இயற்றுபவன் (15), அதைக்

குறிப்பிக்கும் நடனத்தைச் செய்பவன் (9), வேதத்தையே சிலம்பாக அணிந்தவன் (13), வேதத்தையே விடையாக உடைய வன் (195), திருவாதிரை நட்சத்திரத்துக்கு உரியவன் (30), வேதத்தைச் சொன்னவன் (106) என்று வரும் கருத்துக்கள் சிவபெருமானுடைய சிறப்பை எடுத்துக்காட்டுபவை.

இறைவன் எழுந்தருளிய வெள்ளி மலையாகிய கயிலாயம் (11), அழகிய சிற்றம்பலமாகிய தில்லை (9) என்னும் தலங்களைச் சுட்டுகிறார். காஞ்சிபுரத்துச் செய்திகள் பல இடங்களில் வருகின்றன. அங்கே இறைவியினால் அணைக்கப் பெற்ற வரலாற்றைச் சொல்கிறார் (16-19); கம்பைத் திருநதியைக் குறிக்கிறார் (17); 'பூவும் தளிரும் புதுவடுவும் காய்கனியும், மேவும் ஒரு மாவை'ச் சொல்கிறார் (25); 'திவ்வியமாம் காஞ்சி' (141-2) என்று அத்தலத்தைப் போற்றுகிறார்.

இறைவன் பவனி வரும்போது உடன் வருபவர்கள் பலர். திருநந்தி தேவர், வசுக்கள், எழு முனிவர், சிவயோகிகள், துவாதசாதித்தர், சாரணர், வித்தியாதரர், இயக்கர், கிம்புருடர், கின்னரர், கந்தருவர், ஏகாதச ருத்திரர்கள், தும்புரு, நாரதர், தேவர் பலர், சித்தர், முனிவர், பாவாணர், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், சந்திரன், அரம்பையர், அட்டநாகங்கள், திக்கயங்கள், அடியார் இவர்கள் வருகிறார்கள், விநாயகர், முருகன், பிரமன், திருமால், இந்திரன், சாத்தன் ஆகியோர் தம் தம் வாகனத்தில் வருகின்றனர். சுந்தரமூர்த்தி நாயனார், நாவுக்கரசர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், சண்டேசர் ஆகியவர்களும் வருகிறார்கள். காளி, ஏழு கன்னியர், மேனகை முதலிய மகளிர், ஏழு நதிகள் சூழ இறைவன் எழுந்தருளுகிறான்.

அப்போது பல இசைக் கருவிகள் முழங்குகின்றன. முரசு, குடமுழவு, பேரிகை, துந்துமி, துடி, கல்லவடம், மொந்தை, படகம், முருடு, சல்லரி, தாளம், குணிச்சம், தண்ணுமை, சங்கம், தடாரி, சலஞ்சலம், கொக்கரை, மத்தளம் ஆகியவற்றை அடுக்குகிறார் ஆசிரியர் (102-5).

ஆசிரியர் கூறும் தசாங்கங்கள் :

(1) பெயர் : சங்கரன், (2) நாடு : வீரைவள நாடு, (3) ஆறு : பொருநை (தாம்ரவருணி), (4) மலை : கயிலாசம், (5) முரசு : நாதமுரசு, (6) படை : மழு, (7) கொடி : இடபம்,

(8) ஊர்தி : யானை, (9) மாலை : கொன்றை, (10) நகர் : குலசை.

ஏழு பருவப் பெண்களின் ஆடல்களைச் சொல்லும்போது பேதை சிற்றில் இழைத்துச் சிறு சோறு அடுவதையும், பெதும்பை பந்தாடுவதையும், மங்கை கிளியோடு பேசி மகிழ்வதையும், மடந்தையும் அரிவையும் யாழ் வாசித்தலையும், தெரிவை பூக்கொய்து சூதாடுதலையும், பேரிளம் பெண் திருமுறைகளைப் பாடுவதையும் விரிக்கிறார். ஒவ்வொரு பருவப் பெண்ணும் தனக்குரிய அணிகலன்களை அணிந்து கொள்வதை வேறு வேருகச் சொல்லியுள்ளார்.

பேதையைப் பற்றிச் சொல்லும்போது, அவளுடைய கள்ளம் இல்லா வெள்ளைத் தன்மைக்குச் சாந்த ரசத்தை உவமை கூறுகிறார்; "எண்சுவையும் தோற்றும் இயற்சுவைபோற் கொண்டாடும், பெண்சுவையாள்" (151) என்கிறார். அவளுடைய மழலைச் சொல்லில், சொல்லும் பொருளும் வக்கணையான முடிவு பெருமல் இருக்கின்றன. அதற்கு ஆசிரியர் இளம் புலவர்களின் கவியை உவமை கூறுகிறார்; "வாக்கிளைய, நாப்பயிலும் பூப்புலவர் நற்கவிபோற் சொற்பொருள்கள், ஏற்ப முடியாத ஏந்திழையாள்" (159-60).

அரிவையைப் பற்றிச் சொல்லும் பகுதியில் அவளுக்குக் குறிஞ்சி முதலிய ஐந்து திணைகளையும் உவமை ஆக்குகிறார். அவ்வத் திணைக்குரிய கருப்பொருள்களை அவளுடைய உறுப்புக்களோடு ஒப்புமை செய்து இவ்வுவமையை நிறைவுபெறச் செய்கிறார்.

தெரிவையைப் பற்றிய வருணனையில், இறைவனுடைய விழியழலால் மாய்ந்த மன்மதனுடைய அங்கங்களைத் தன் அங்கங்களால் நிலைநிறுத்தும் அழகையுடையவள் என்று அமைத்திருப்பது நயமாக இருக்கிறது. மன்மதனுடைய யானை இருள்; அதைத் தன் கூந்தலால் நிலைநிறுத்தினாளாம். அவன் குதிரையாகிய கிளியைத் தன் மொழியாலே தாபித்தாளாம். பல்லால் முல்லையரும்பையும், முகத்தால் தாமரையாகிய பாணத்தையும், விழியினால் குவளைப் பாணத்தையும், மேனியாகிய கரும்பால் அவன் வில்லையும், அல்குலால் அத்தாணியையும், முன்கையால் மகரகேதனத்தையும் நிறுவினாளாம். மன்மதனுடைய அங்கங்களாகிய பொருள்கள், அவள் உறுப்புக்களாகத் தோற்றி நின்றன என்று சமற்காரமாகக் கூறுகிறார்.

"கவடுபடாக் கைக்கற்பகம்" (காப்பு) என்பதில் சிலேடை அமைந்திருக்கிறது. இறைவன் பெருமையை விரிக்கும் பகுதியில், "மறைவகுத்த, வாயன் திருநமச்சி வாயன் பதத்தினிற்செவ், வாயன்பு வைத்தார்தம் வாயினுன்" (29) என்பது முதல் ஐந்து கண்ணிகளிலும், "பாரிடங்கள் தாமசையப் பாரிடங்கள் தாமோடி" (91) என்பதிலும், "எவ்வனமும் நீருடையீர்" (141) என்பது முதல் 146-ஆம் கண்ணிவரையுள்ள பகுதியிலும் பலவகை யான மடக்குகளை ஆள்கிருர்.

சிவபெருமானுக்குரிய அடையாளமாகிய கொன்றையை ஆரக்வதம் என்று வடமொழியிற் கூறுவர். அச்சொல்லைத் தமிழில் எடுத்தாண்டவர் அரியர். இவ்வாசிரியர் அதை ஆர்க்குவதம் என்று திரித்து இரண்டிடங்களில் ஆளுகிருர்.

"ஆர்க்குவதம் எங்கட் களியாமல்" (145)
"ஆர்க்குவதம் பூண்ட அழகன்." (228)

மேனகையை இவர் மேனை என்று சொல்கிருர் (100). மேனை என்பது இமய அரசனின் மனைவிக்குப் பெயர். ஆனுல் இங்கே, "மேனைமுத லுள்ளிட்ட விண்ணின் மகளிரெல்லாம், நானு விதத்தில் நடம்புரிய" (100) என்று கூறும்போது அது பொருந்தாது; மேனகையையே இவர் நினைக்கிருர் என்பது நடம் புரிவதைச் சொல்வதால் வெளியாகும்.

திருநெல்வேலி மாவட்டக்காரர்கள் பாட்டுப் பாடுவதைப் பாட்டுப் படித்தல் என்று சொல்வது வழக்கம்; அது வட்டார வழக்கு. இவ்வாசிரியர் அந்த மாவட்டத்தினராதலால்,

"பல்லாண் டெடுத்துப் படித்துவர" (74)

"நாவாரத் தேவாரம் நண்ணுதிரு வாசகமும்
பாவாணர் பண்ணிற் படித்தோத" (80)

என்று அந்த வழக்கை ஆள்கிருர்.

ஓரிடத்தில், "வேட்ட பொழுதி னவையவை போலுமே, தோட்டார் கதுப்பினுள் தோள்" என்னும் திருக்குறளை அப்படியே எடுத்துப் பதித்திருக்கிருர் (276.)

இந்த உலா, தெள்ளத் தெளிந்த நடையில், சுருக்கமான வருணனைகளுடன் அமைந்து விளங்குகிறது. இந்த நூலின் ஆசிரியர் இன்னுரென்பதும், இன்ன காலத்தில் இந்நூல் எழுந்தது என்பதும் தெரியவில்லை.

# 3

ஐயரவர்கள் நூல் நிலையத்தில் இந்த நூலின் ஏட்டுப் பிரதி ஒன்றும் கடிதப் பிரதி ஒன்றும் உள்ளன. கடிதப் பிரதியில், 'இதற்குக் கல்யாணபுரம் என்று ஒரு பெயர் உண்டு' என்ற குறிப்பும், 'முன்பு திருவாவடுதுறையிலிருந்து உடுமலைப் பேட்டை சென்றிருந்த திருச்சிற்றம்பல ஓதுவாரிடமிருந்து குன்றக் குடி அப்பாப்பிள்ளையவர்கள் பெற்றுத்தந்த ஏட்டுப் பிரதியைப் பார்த்து எழுதியது இந்தப் பிரதி' என்ற குறிப்பும் இருந்தன.

ஐயரவர்கள் பல உலாக்களைப் பதிப்பித்திருக்கிறார்கள். சிவத்தல சம்பந்தமான உலாக்களில் வரும் மகளிர் உருத்திர கணிகையர் என்பதனால், சில பெரிய தலங்களில் அக்காலத்தில் பணிபுரிந்து வந்த தளிப் பெண்டுகள் உலாவைப் பாடி வந்தார் களாம். ஐயரவர்களே இந்தச் செய்தியைச் சொன்னதோடு, சில இடங்களில் அத்தகையவர்கள் கூறிய உலாப்பகுதிகளைக் கேட்டுக் குறித்துக் கொண்டதும் உண்டு. தலத்தின் வரலாறு, புராணச் செய்திகள், அங்கே ஆசிரியர் காலத்தில் வாழ்ந்த நல்லோர்களைப் பற்றிய செய்திகள், தேவாரம் முதலியவற்றில் இலைமறைகாய் போல் உள்ள கருத்துக்கள் முதலியவற்றை உலாப் பிரபந்தங்களால் அறிந்து கொள்ளலாம் என்பது அவர்கள் கருத்து. அவர்கள் தேடி வைத்து இன்னும் அச்சில் வாராத உலாக்கள் பல இந்த நூல் நிலையத்தில் உள்ளன.

இந்தச் சிறிய பிரபந்தம் திருமயிலை ஆரியமத சபையினர் வழங்கிய பொருளைக் கொண்டு வெளியிடப்படுகிறது. இந் நூல் நிலையத்தின் சார்பில் அவர்களுக்கு நன்றியறிவைத் தெரிவித்துக் கொள்கிறேன். வேறு நிறுவனத்தாரும் செல்வரும் இவ்வாறு பொருள் வழங்கி ஆதரவு அளித்தால் இதுகாறும் வெளிவராத பல அரிய நூல்களை வெளியிடலாம். தமிழ் மகளின் திருமேனிக்கு எழிலூட்டும் அணிகலன்களாக அவை திகழும். இறைவன் திருவருளால் அவ்விருப்பம் நிறைவேற வேண்டும்.

இந்த நூலை வெளியிடும்போது எனக்குத் துணையாக இருந்து உதவிய சிரஞ்சீவி மு. கோ. இராமன் இறைவன் திருவருளால் எல்லா நன்மைகளும் பெற்று நீடூழி வாழ வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

'காந்தமலை' — கி. வா. ஜகந்நாதன்

சென்னை-28 — 3-12-1972

உ

சிவமயம்

# குலசை உலா

## காப்பு

காருலாந் தென்குலசைக் கச்சிகொண்ட வீசுரர்மேல்
சீருலாப் பாடத் திறனல்கும்—மேருக்
குவடு சுவடுபடக் கொம்பா லெழுதும்
கவடுபடாக் கைக்கற்ப கம்.

## நூல்

## சிவபெருமான் பெருமை

சீர்பூத்த தாமரைபோற் செங்க ணெடுமாலும்
தார்பூத்த மார்பிற் சதுமுகனும்—ஏர்பூத்த

பூப்பொலிந்த சேவடியும் பொன்முடியுங் காண்பரிய
தீப்பிழம்பாய் நின்ற திருவுருவன்—கூப்புமிரு

---

**காப்பு**

குலசை - குலசேகரப்பட்டினம். கச்சிகொண்ட ஈசுரர்-கச்சிகொண்ட பாண்டீசுரர். சுவடு-எழுத்தால் உண்டாகும் அடையாளம். எழுதும்-பாரதத்தை எழுதும். கவடு-கிளை, வஞ்சகம். கற்பகம்-கற்பக விநாயகர்.

**நூல்**

2. தீப்பிழம்பு என்றது அக்கினி மலையை.

3. உள்ளத் தாமரையாகிய திருக்கோவிலை உடையவன்; "மலர்மிசை ஏகினன்." (குறள்)

கையுடையா ருள்ளக் கமலா லயமுடையான்
பொய்யுடையா ருள்ளம் புகுதா தான்—மெய்யுடைய

ஏக னநேக னிரண்டற் றகலாத
போக மளிக்கும் பொருளானோன்—மோகமுறும்

எல்லா வுயிர்க்கு முயிரா யவரவர்கள்
செல்லுங் கருத்திற் செறிவானோன்—வல்லார்சொல்

வாக்குமனு தீதன் மறைகளுக்கு மெட்டாதான்
போக்குவர வில்லாத பூரணத்தன்—நோக்கரிய

முக்குணத்தின் மூவரையுந் தோற்றிமுறை யேயவர்க்குத்
தக்கவகை முத்தொழிலுந் தானளிப்போன்—மிக்க

உருவ னருவ னுருவருவ மில்லான்
இருள னொளியனவை யில்லான்—பொருவிலா

ஐந்தொழிலுஞ் செய்தே யழகியசிற் றம்பலத்தே
நந்தலிலா ஞான நடம்புரிவோன்—அந்தமிலா

நித்த னநாதி நிமலன் பிறவாத
சுத்த னறிவன் சுகாதீதன்—அத்துவிதன்

வேல்போலுங் கண்ணி விமலையுடன் வீற்றிருக்கும்
பால்போலும் வெள்ளிப் பருப்பதத்தான்—மேலொழுகும்

கங்கைச் சடையான் கறைமிடற்றான் கண்ணுதலான்
பொங்கரவப் பூணன் புலித்தோலான்—பங்கமிலா

---

4. இரண்டற்று அகலாத போகம் - இரண்டறக் கலக்கும் பேரின்பம்.

6. மனுதீதன்-மனத்திற்கு அப்பாற்பட்டவன்.

7. மூவர்-பிரம்மா, விஷ்ணு, உருத்திரன்.

8. பொரு-ஒப்பு.

12. கறை-நஞ்சத்தின் கறுப்பு.

வேதப் பரிபுரத்தான் வீரக் கழலுடையான்
பூதப் படையான் பொருவிடையான்—சோதிதரும்

வெண்ணீற் றழகன் விளங்குமண்ட பிண்டமெல்லாம்
எண்ணீற்றிற் காணு திறப்பிப்போன்—வண்ணமுற

ஆக்குவோன் காப்போ னழியா மலப்பிணியை
நீக்குவோன் வீட்டி னிறுத்துவோன்—பாக்கியமாம்

எங்கண் மலைமடந்தை யெவ்வுயிரும் பெற்றெடுத்தும்
கொங்கை தளராக் குமரியாள்—பொங்கியசீர்க்

காஞ்சிப் பதியிலருட் கம்பைத் திருநதியில்
வாஞ்சை மிகுத்து வழிபடவே—ஆஞ்சலமாய்

வெள்ளம் பெருகிவர விம்மி விதிர்விதிர்த்துத்
தள்ள வொழியா ததுகண்டே—உள்ளணைத்துக்

கொள்ளத் திருமலர்க்கைக் கோல வளைத்தழும்பும்
வள்ளத் தனக்குறியும் வைத்திருப்போன்—என்னரிய

பேரருளி னாலே பெருமுத் தமிழ்கொழிக்கும்
சீருடைய பாண்டித் திருநாட்டுக்—காரிலகும்

கொண்ட லுறங்குங் குளிர்ந்தமலர்ச் சோலைகளில்
தண்பவள வல்லி தழைத்தேறும்—தெண்டிரைசூழ்

மாடமொடு மாளிகையு மண்டபமுங் கோபுரமும்
ஆடரங்கும் பொன்னு லமைத்திட்ட—பீடுடைய

தேராரும் வீதித் திருக்குலசை மாநகரில்
பாராருங் கீர்த்தியொரு பாண்டியன்முன்—ஆராத

ஆசையோ டுந்தவஞ்செய் தன்பா யவன்வேண்ட
மாசில்வடி வாயுதித்து வாழ்ந்திருப்போன்—பேசிலென்றும்

---

13. வேதப் பரிபுரத்தான்-வேதமாகிய சிலம்பை அணிந்தவன். பொரு-பகைவரை மோதுகின்ற.

14. ஈற்றில்-பிரளய காலத்தில்.

19. வள்ளத் தனம்-வள்ளம் போன்ற நகில்.

22. ஆடரங்கு-நாடகசாலை.

பூவுந் தளிரும் புதுவடுவுங் காய்கனியும்
மேவு மொருமா வியப்புடையான்—மூவுலகின்

எல்லா வழகு மெடுத்துத் திரட்டிவைத்த
உல்லாச மான வுருவுடையான்—நல்லோர்தம்

கண்ணு ரமுதங் கருணைப் பெருமாட்டி
ஒண்ணீலக் கண்ணு ளொளிமுகத்தாள்—எண்ணுண்

அறம்வளர்த்த நாயகியென் னம்மைமண வாளன்
பிறைமுடித்த செஞ்சடையெம் பெம்மான்—மறைவடித்த

வாயன் றிருநமச்சி வாயன் பதத்தினிற்செவ்
வாயன்பு வைத்தார்தம் வாயினான்—மேயதொரு

கங்கையா னேங்குசிவ கங்கையான் மானேந்து
செங்கையான் செங்கையான் செங்கையான்—மங்கையுறும்

அங்கத்தா னங்கத்தா னங்கத்தான் பூதியணி
சங்கத்தான் சங்கத்தான் சங்கத்தான்—தங்கத்

திருக்கார் முகத்தான் றிசையானன் மூன்று
திருக்கார் முகத்தான் றிசையான்—பெருத்தொலிக்கும்

---

28. அறம் வளர்த்த நாயகி: தலத்தில் எழுந்தருளியுள்ள அம்பிகை.

29. செவ்வாய்-செவ்வையாக. வாயினான்-அவர்கள் வாக்கில் எப்போதும் இருப்பவன்; என்றது, அன்பர் எப்போதும் இறைவன் திருநாமத்தைக் கூறுவதைக் குறித்தபடி.

30. சிவகங்கை : தீர்த்தம். செங்கையான் - திருவாதிரை நட்சத்திரத்திற்குரியவன், செம்மையாகிய செயலை உடையவன்; கை-செயல்.

31. அங்கத்தான்-திருமேனியை உடையவன்; அங்கத்தான்-என்பை யணிந்தவன்; அங்கத்தான்-நாடு மலை முதலிய அங்கங்களை உடையவன்.

31—2. தங்கத் திருக் கார்முகத்தான்-பொன் மலையான அழகிய வில்லை யுடையவன். திசையான்-திசைகளை யுடையான்.

ஓதப் பரவையா னுன்னுந் திருமுடிமேல்
ஓதப் பரவை யுடையபிரான்—சீதமுறப்

பொங்கு மணமும் புதுமலரும் போலுலகம்
எங்கு நிறைந்தருளு மெம்பெருமான்—தங்கும்வினை

தீண்டா வுருவன் றிருநாமங் கச்சிகொண்ட
பாண்டீ சுரனும் பரஞ்சோதி—காண்டகுசீர்

## பவனிவரத் திருவுள்ளம் கொள்ளுதல்

மாணிக்க முத்து வயிர மணிமுதலாம்
ஆணிப் பசும்பொ னழுத்தியபல்—தூணத்

திலங்குமணி மண்டபத்து ளெத்தேவும் போற்ற
நலங்கொ ளரியணையி னுப்பண்—வலங்கொள்

இருக்கோய் விலாமலெடுத் தேத்தவுமை யோடும்
திருக்கோ யிலுள்ளிருப்பச் செவ்வி—அருக்கனைநேர்

பாவேந்தர் போற்றும் பசும்பொற் கிரீடமுடி
மூவேந் தருநன் முனிவர்களும்—யாவர்களும்

மாட்சிக் கடல்போல வந்தீண்டி யெம்பெருமான்
காட்சியளித் தெங்களையுங் காவென்ன—ஆட்சியாய்ச்

சித்திரைத் திங்கட் டிகழ்வசந்த காலத்தில்
பத்தரெல்லாங் காணப் பவனிவர—அத்தன்

---

மூன்று திருக்கு ஆர் முகத்தான்-மூன்று திருக்கண்களையுடைய திருமுகத்தை யுடையவன். திலகயான்-மயங்காதவன்.

33. ஓதப் பரவையான்-ஒலியையுடைய திருப்பாற் கடலை யுடைய திருமால். ஓது அம்பு அரவை-சிறப்பாகச் சொல்லும் கங்கையையும் பாம்பையும்.

38. இருக்கு-வேதம். அருக்கனை நேர்-சூரியனுக்கொப்பான.

38—9. அருக்கனை நேர் கிரீடம்.

திருவுள் ளத் துள்ளச் சிறப்புடைய தோழர்
அருகணைந்து கைத்திறத்தி னாலே—கருணைபொழி

ஞானப் பிழம்பான நல்லதிரு மேனிதனக்
கான முறையே யலங்கரிப்பான்—மேன்முடியில்

## அலங்காரம்

பொன்னின் மகுடம் பொலிவித் தழகொழுகும்
மின்னுதலில் வெண்ணீறு வேய்ந்திட்டுக்—கன்னமதில்

எண்டிசையுஞ் சோதி யெறிக்கு மிருமகர
குண்டலங்க ளிட்டுக் குவடனைய—திண்டோளிற்

கேயூரம் பூட்டிக் கிளரொளிச்செங் கண்டத்திற்
காயொளிசே ரக்குமணிக் கண்டிகைசேர்த்—தாயிரம்பொற்

சோதிக் கதிர்போற் றுலங்குந் திருமார்பில்
சீதத் தரளத் திருவடமும்—பேதமுறு

செம்பொற் சரப்பளியுஞ் சேர்சன்ன வீரமுடன்
பம்புபதக் கங்கள் பரப்பியே—வம்பருத்

துய்யதிருக் கொன்றைத் தொடைமா லிகையணிந்து
கையின் மணிக்கங் கணம்பூண்டு—செய்யகதிர்

மன்னுதர பந்தனமு மாணப் பிணித்துநீ இப்
பன்னிறத்த பீதாம் பரமெடுத்துத்—தன்னிகரில்

சுந்தரம் பூத்துச் சுடர்பூத்த பொன்னரையின்
முந்தப் புனைந்து முழந்தாளில்—அந்தமிலா

---

42. உள்ள-நினைக்க.

44. கன்னம்-திருச்செவிகள்.

46. கேயூரம்-தோள்வளை. அக்குமணிக் கண்டிகை-ருத்திராட்சமாலை.

48. சன்னவீரம்-வீர சங்கிலி.

ஏதிலுயிர்க் கெல்லா மிவனே யிறைவனென்னும்
நாதக் கழலணிந்து நற்கமல—பாதத்தில்

தக்கன் புரிவேள்விச் சாலையிற்றன் மேலெழுந்த
உக்கிர மெல்லா மொழிவதற்குச்—செக்கர்ப்

பருதி யிருகாலும் பற்றி யிரந்தாங்
கரவமணி நூபுரமு மார்த்துத்—தெரிசிப்போர்

## அம்பிகைக்கு அலங்காரம்

கண்ணிற் கருத்திற் கடங்காத் திருக்கோலம்
மண்ணிப் பணிய மலைமகட்குப்—பெண்ணமுதம்

ஆன திருப் பூமகளு மாய்ந்தகலை நாமகளும்
ஞான மணக்கு நறுங்குழலில்—வானமுறு

கற்பகத்தின் பூமலைந்து காதிற் குழைதரித்து
விற்பொலியு நெற்றி மிசையழகாய்—அற்புதமாய்ச்

சுட்டி யணிந்து சுடர்ப்பட் டமுமணிந்து
வட்டமுறு பொட்டு மகிழ்ந்திட்டுச்—சிட்டர்க்

கருட்கடைக்க ணோக்கி யனுதினமு மின்பம்
சுரக்கு மிருவிழிக்குஞ் சுற்றித்—திருக்கிளரும்.

மையணிந்து மார்பின் மணமா லிகைநிறைத்துக்
கையில் வயிரக் கடகமிட்டுச்—செய்யவொளிப்

பொன்னரி யாரம் புரளும் படிதரித்துப்
பன்னரிய மின்னும் பணிதரித்து—மன்னியசீர்க்

---

54. பருதி-சூரியன். அரவம் மணி நூபுரம்-ஒலியை உடைய மாணிக்கச் சிலம்பு; சிலம்புக்குச் சூரியன் உவமை. ஆர்த்து-கட்டி.

55. மண்ணி-திரு அபிடேகஞ் செய்து.

56. அம்பிகைக்கு ஞானப் பூங்கோதை என்பது ஒரு பெயர்.

57. மலைந்து-அணிந்து. வில்-ஒளி.

கோங்கரும்பைப் போலுங் குரும்பை தனைப்போலும்
பூங்கமலம் போலும் புணர்முலைமேல்—தேங்கமழும்

குங்குமம் பூசிக் குளிர்சாந் தமும்புழுகும்
தங்குங் களபத் தளறணிந்து—சிங்காரத்

தொய்யி லெழுதித் துணையொன் றுரையாமல்
ஐயந் தருநுசுப்பிற் கைந்தருமுன்—நெய்தளித்த

செம்பட் டுடுத்துத் திருமே கலையணிந்து
செம்பஞ் சழுத்துமலர்ச் சீறடியிற்—கம்பிவிதப்

பாடகமு மாற்றில் பரிபுரமுங் கிண்கிணியும்
கூடக் கலந்தணிந்து கோலமுற—நாடிமிகச்

சித்திரித்த தேவி செழிக்க வறம்வளர்த்த
உத்தமியோ டுந்திருநல் லோரைதனில்—வித்தகமாய்ப்

பூங்கோயி லுள்ளிருந்து புண்ணியனார் போதரலும்
பாங்கான நந்திப் பழவிடையை—ஓங்கியசீர்

நற்கோலஞ் செய்துபெரு நாத மணிபூட்டிப்
பொற்கோவை யாரம் புனைதந்து—முற்கொணர

வெள்ளை யிடப மிசையேறி மாதருளம்
கொள்ளையிட வாயில்வெளிக் கொள்ளலுமே—தெள்ளியசீர்ச்

## உடன்வருவோர்

செந்தா மரைக்கைதனிற் றெய்வப் பிரம்பெடுத்து
நந்தீ சுரனார் நடுவணையப்—பந்தியாய்

---

62. பூங்கமலம் என்றது இங்கே தாமரை மொட்டை.

63. களபத்து அளறு-கலவைச் சந்தனத்தின் சேறு.

64. துணை-ஒப்பு. நுசுப்பு - இடை.

66. மாற்று இல்-மாற்று அறியாத பொன்னலாகிய. கோலம்- அழகு.

68—9. நந்தியாகிய பழவிடையை முற்கொணர.

வந்து வசுக்கடிரு வாயான் மறையோத
அந்தரத்திற் றுந்துமியைந் துங்கலிக்கப்—புந்தியுறு

சத்த விருடிகளுஞ் சார்ந்தா சிகளுரைக்கச்
சுத்தசிவ யோகியர்கள் சூழ்ந்துவரச்—சித்திரஞ்சேர்

எல்லாக் கலையுமுண ரீராறு சூரியரும்
பல்லாண் டெடுத்துப் படித்துவர—வல்லாண்மைச்

சாரணர் விச்சா தரரியக்கர் கிம்புருடர்
காரணர் கின்னரர்கள் கந்திருவர்—தாரமுறு

கின்னரியா ழேற்றியருட் கீர்த்தியெல்லாம் வாசிப்பத்
தன்னே ருருத்திரர்க டாம்பழிச்சப்—பன்னரிய

தும்புரு வீணைச் சுவையொழுக்க நாரதனார்
கொம்பு நரலக் குழலியம்ப—இம்பர்களும்

எண்ணிறந்த கோடி யிமையோர் களுந்துதிப்பக்
கண்ணிறைந்த சித்தர் கணஞ்சூழப்—புண்ணியநன்

மாமுனிவ ரெல்லாரு மங்கலச்சொல் வாழ்த்தெடுப்பப்
பூமாரி யெங்கும் பொழிந்திழியச்—சேமமிகும்

நாவாரத் தேவார நண்ணுதிரு வாசகமும்
பாவாணர் பண்ணிற் படித்தோத—ஓவாமல்

அங்கிபசும் பொன்னா லமைத்த மணியகலிற்
குங்குலியத் தூபங் கொடுத்துவர—அங்கத்தின்

வண்ணங் கரிய மறலி மறவாமல்
எண்ணும் படைக்கலங்க ளேந்திவர—உண்மகிழ்ந்து

---

72. கலிக்க-முழங்க.

75. தாரம்-உச்ச இசை.

76. பழிச்ச-புகழ.

77. இம்பர்கள்-இவ்வுலகத்தில் உள்ளவர்கள்.

81. அங்கி-அக்கினிதேவன்,

82. மறலி-யமன்.

நண்ணு நிருதி நகையுமிழு மாபரண
வண்ணமணிப் பேழை மருங்கேந்த—ஒண்ணிறைந்த

சீரிணங்கு கோவருணன் சீதநீர் பூரித்த
பூரண கும்பம் புடையெடுப்பத்—தோரணஞ்சூழ்

வீதியெல்லாம் வாயு விளக்கி விரைகமழும்
சீதப் பனிநீர் தெளித்துவர—நீதியினல்

அம்புவியோர் போற்று மளகா புரிக்கரசன்
செம்பொன் மழைமாரி சிந்திவரக்—கம்பமிலா

ஈசானன் வந்தடப்ப மேற்ப வெழிற்சோமன்
கூசாமல் வெற்றிக் குடைபிடிக்கத்—தேசாரும்

சொற்கோ கிலம்போலச் சொல்லு மரம்பையர்கள்
பொற்காற் கவரி புடையிரட்ட—விற்காலும்

அட்டநா கங்க ளணியார் விளக்கெடுப்ப
எட்டுநா கங்க ளெதிர்முழங்கப்—பட்டின்

இடபம் பொறித்த வெழின்மிகுத்த வண்ணக்
கொடிக ளடியார்கைக் கொள்ள—வடிவுடைய

பாரிடங்க டாமசையப் பாரிடங்க டாமோடி
ஆடி யரகரவென் ருர்த்திடவே—மாடமறு

கூடு வரும்பொழுது குஞ்சர மாமுகத்தன்
மூடிக வாகனத்தின் முன்செல்ல—நாடியசீர்

---

84. கோ வருணன்-மேன்மையையுடைய வருணன்.

86. அளகாபுரிக்கு அரசன்-குபேரன். கம்பம்-நடுக்கம்.

87. சோமன்-சந்திரன்.

88. பொற்கால்-பொன்னாலாகிய காம்பையுடைய. விற்காலும்-ஒளி வீசும்.

89. எட்டு நாகங்கள்-எட்டுத் திக்கயங்கள்.

91. பாரிடங்கள்-பூதகணங்கள். பார் இடங்கள்-உலகத்தில் உள்ள பல இடங்கள். 91-2. மாடமறுகு ஊடு.

வள்ளிமண வாளன் மயில்வா கனமுகைக்கப்
புள்ளனத்தில் வேதன் புடைபடரத்—தெள்ளும்

திடக்கருட னேறித் திருமா லிறைவன்
இடப்புறத்திற் செல்ல விழியும்—கடத்தினையார்

அந்தமுறு நாற்கோட் டயிரா வதத்தேறி
இந்திரன் பின்னே யிசைந்துவர—அந்தரத்தில்

சாரிவரு மாவிற் றழைத்ததொரு செண்டேந்திக்
காரிக் கடவுள் களித்துவரப்—பேரழகின்

ஆலால சுந்தரரு மற்புதநா வுக்கரசும்
பாலரு வாயனெனும் பண்டிதனும்—சோலைத்

திருவாத வூரிற் சிகாமணியுந் தாதை
இருதாளுஞ் செற்ற விறையும்—அருகணையச்

சிங்கத்தி லேறித் திரிசூலி நீலிவர
அங்கன்னி மாரெழுவ ராதரிக்க—இங்கிதமாய்

மேனைமுத லுள்ளிட்ட விண்ணின் மகளிரெல்லா
நாளு விதத்தி னடம்புரியத்—தூ நீராம்

கங்கை முதலாங் கடவு ணதியேழும்
பொங்கி மகிழ்ந்து புடைசூழ—மங்களமாய்

வெற்றி முரசும் விளங்குங் குடமுழவும்
சுற்றியவார்ப் பேரிகையுந் துந்துமியும்—பற்றுதுடி

---

93. உகைக்க-செலுத்த.

94. கடத்தினை ஆர்-மதத்தைப் பொருந்திய.

95. அந்தம்-அழகு. அந்தரம்-வானம்.

96. மாவில்-குதிரையின்மேல். செண்டு - சவுக்கு. காரிக் கடவுள்-ஹரிஹரபுத்திரர்.

97. பாலருவாயன்-திருஞானசம்பந்தர்.

98. இறை-சண்டேச்சுரர். 100. மேனை-மேனகை.

101. கங்கை, யமுனை, கோதாவரி, சரஸ்வதி, நர்மதை, சிந்து, காவேரி என்பன ஏழு நதிகள்.

102. வார் பேரிகை-வாரையுடைய பெரிய முரசு.

கல்லவட மொந்தை கறங்குபட கம்முருடு
சல்லரிகைத் தாளந் தழைகுணிச்சம்—கல்லெனுஞ்சீர்

தண்ணுமை சங்கந் தடாரி சலஞ்சலங்கள்
மண்ணிய கொக்கரையு மத்தளமும்—எண்ணிலா

அண்ட முகடு மதிர்ந்து கிடுகிடென
எண்டிசையு மண்டி யெழுந்தார்ப்ப—இண்டை

## திருச்சின்னம்

தரித்தசிவன் வந்தான் சதுமறையை வாயால்
விரித்தசிவன் வந்தான்வில் வேடன்—புரத்தை

எரித்தவிறை வந்தா னெதிர்த்தகரி வேங்கை
உரித்தவிறை வந்தா னொருவன்—கரத்தை

நெரித்த வரன்வந்தா னிறுத்து திரிசூலம்
திரித்தகரன் வந்தான் செழுந்தீக்—கரத்தை

முரித்தபரன் வந்தான் முளரியயன் சென்னி
பிரித்தபரன் வந்தான் பெருநீர்—வரத்தான்

பரித்தபிரான் வந்தான் படர்புரிசை வேவச்
சிரித்தபிரான் வந்தான் சிவந்த—உருத்திகழும்

---

104. சலஞ்சலங்கள்-ஒரு வகையான சங்கங்கள்.

105. மண்டி-நெருங்கி. இண்டை-தலையிலணியும் மாலை.

106. வில்வேள் தன் புரத்தை-கரும்பு வில்லையுடைய காமனுடைய உடலை.

107. ஒருவன்-இராவணன்.

108. திரித்த-சுழற்றிய.

109—10. பெருநீர் வரத் தான் பரித்த-கங்கை வானத்தில் வர அதனைத் தான் தாங்கிய.

110. படர் புரிசை-எங்கும் திரிந்த முப்புரங்கள்.

பொன்னின் சடாமகுடன் போந்தா னெனப்புகன்று
பன்னுதிருச் சின்னம் பணிமாறப்—பொன்னுலகத்

தண்டர் திருமுனிவ ரைம்பொறியும் பின்றொடரக்
கொண்ட வறிவுடையோர் கொண்டாடித்—தெண்டனிட்டுச்

## தசாங்கம்

சங்கர னென்னத் தழைத்த திருநாமன்
மங்கலஞ்சேர் வீரை வளநாடன்—தங்கியமால்

ஆணவ மாசி னழுக்ககல நாமூழ்கும்
பேணருஞ்சீர்த் தண்பொருந்தப் பேராறன்—காணரிய

தெள்ளிய வன்பர் திருவுள் ளம்போல்விளங்கும்
வெள்ளிக் கயிலாச வெற்புடையான்—கள்ளமுறு

பேதப் புறச்சமயப் பித்தர் செவியடைப்ப
நாதத் தொனியெழுப்பு நன்முரசான்—ஆதரித்த

தொண்டர்க் கிரங்கித் தொடுத்து வரும்பகையை
மண்டி யறுக்கு மழுப்படையான்—விண்டலத்தில்

எல்லாக் கொடியு மிணையல்ல வென்றோங்கும்
வில்லாரும் வென்றி விடைக்கொடியான்—நல்லநெறி

போற்று திருந்து புரைநெறியை யுண்டாக்கும்
மாற்றுரை வெல்லு மதகரியான்—ஊற்றிதழ்த்தேன்

உண்டருக் கீத மொழியாமற் பாடிமகிழ்
வண்டருக் கொன்றை மலர்த்தாரான்—பண்டாய

ஏழுலகத் துள்ளார்க்கு மெவ்வரமுந் தானளித்து
வாழுங் குலசை வளநகரான்—வாழியென

---

113. மால்-மயக்கத்தைத் தரும்.

114. பொருந்தப் பேராறு-தாமிரபரணி நதி.

118. வில்-ஒளி.

119. புரை நெறி-தீ யொழுக்கம்.

எண்ணுந் தசாங்கமிவை யெம்மருங்குங் கோடிக்க
அண்ணலார் கோமறுகி லாங்கணேயக்—கண்ணூர்

## குழாங்கள்

கருப்புச் சிலையுடைய காமன் படைகள்
அருப்பம் பெடுத்தோட வாங்கே—விருப்பமிகும்

சீரியத்தி ேைசை யமுதஞ் செவிதேக்கச்
சூரிய காந்தச் சுடர்மணியும்—நீர்பிலிற்றும்

சந்திர காந்தத் தடமணியுங் கொண்டிழைத்த
மந்திரங்க டெற்றி மணிவாயில்—பந்தியுறு 125

மாளிகையிற் சூளிகையின் மாடகூ டப்பரப்பில்
சாளர வாயிற் றலங்களிலும்—மீளரிய

பத்தி முதிர்ந்து பரமனுக்காட் பட்டவர்போற்
சித்தஞ் சிவனிடத்திற் சென்றேற—முத்தம்

பவளவள் ளத்திற் பதித்ததுபோற் செவ்வாய்த்
தவள நகையுடைய தையல்—மடவார்கள்

காலிற் சிலம்பு கலகலெனக் கைவளைகள்
ஓலிட் டகல்வார்போ லுக்கிடவே—மாலளிக்கும்

---

123. காமன் படைகள்-மகளிர். அரும்பாகிய அம்பு.

124. சீர் இயத்தின் ஓசை; இயம்-இசைக் கருவி.

125. மந்திரங்கள்-வீடுகள். தெற்றி-திண்ணை. பந்தி-வரிசை.

126. சூளிகை-உச்சியிலுள்ள மண்டபம்.

128. தையல் மடவார்கள்-அலங்காரத்தை உடைய பெண்கள்.

129. ஓலிட்டு-ஓசை செய்து. உக்கிட-நழுவ. மால்-மயக்கம்.

கொங்கைக் குடங்குலுங்கக் கொப்புக் குழைக்காது
பொங்கு மணியூசல் போலாடச்—சிங்கவிடைக்

கூறை யவிழக் குழலவிழ மாதவரும்
வீறழிய மின்னுக் கொடிபோல—ஏறியெங்கும்

அன்னங் கிளிபோலு மாடு மயில்போலும்
பன்னு மெழுபருவப் பாவையரும்—துன்னியே

கண்ணிறையக் கண்டு களித்துமலர்க் கைகூப்பி
உண்ணிறைந்த நாணமெல்லா மோட்டெடுப்ப—நண்ணி

உடையவரே யென்பா ரொருத்தியிடங் கொண்ட
சடையவரே யென்பார் தளர்வார்—நடைபெயராச்

சித்திரம்போ னின்று திகைப்பார் நகைப்பார்கள்
அத்த னழகே யழகென்பார்—எத்தவமுன்

செய்திருந்தோ மென்றுசிலர் சிந்திப்பார் வந்திப்பார்
வெய்துயிர்த்து விம்மி விழுவார்கள்—ஐயனே

சற்றே திருக்கடைக்கண் சாத்தீ ரெனப்பகர்வார்
குற்றேவ லெங்களையுங் கொள்ளுமென்பார்—பற்றினிமேல்

உம்மைவிட வில்லை யொருவரெமக் கென்றுரைப்பார்
கொம்மைமுலை காட்டிக் குழைந்திடுவார்—வெம்மையுறும்

அக்கினியைக் கண்ட வரக்கா யுருகியிவர்க்
கொக்குமோ நம்மழகு மோவென்பார்—திக்குலவும்

கண்முத்தஞ் சிந்திக் கலுழ்வார் வலம்புரியின்
வெண்முத்தம் போன்மெய் வெளுத்தயர்வார்-ஒண்மொய்த்த

---

131. கூறை-ஆடை.

134. ஒருத்தி இடம் கொண்ட சடையவர்-உமாதேவியாகிய ஒப்பற்றவளை வாமபாகத்தில் கொண்டவரும் சடையை உடையவருமான சிவபெருமான்; கங்கை யாகிய ஒரு பெண்ணைத் தன்னிடத்துக் கொண்ட சடாபாரம் கொண்டவர் என்பதும் ஆம்.

எவ்வனமு நீருடையீ ரானக்கா லெம்முடைய
எவ்வனத்தை வவ்விடுவ தென்னென்பார்—திவ்வியமாம்

காஞ்சி யுடையவரே காணும லிவ்விடையிற்
காஞ்சியுடை கொள்ளல் கரவென்பார்—வாஞ்சைக்

கரவலையீர் நீரென்றுங் காத லுடையேம்
கரவளையைக் கொள்ளைகொள்ளுங் காதல்—உரையுமென்பார்

எற்பணியு மக்குணத்தீ ரென்றக்கா லெம்முடைய
பொற்பணியை யேன்கவர்ந்து போதிரென்பார்—முற்பணிய

ஆர்க்குவத மெங்கட் களியாம னீரருள்வ
தார்க்குவத ணும்புயத்தீ ரங்கென்பார்—பார்க்குங்கால் 145

நாண்மதியங் குள்ளவரே நாடிவரு மெம்முடைய
நாண்மதியை நீர்கவர்த லன்றென்பார்—நாணிக்குக்

கைச்சாபங் கொண்டவனைக் கண்ணு லெரித்ததுபொய்
மெய்ச்சாப மிட்டவனை வெல்லுமென்பார்—இச்சைமிகத்

---

141. எவ் வனமும் - எந்த வர்ணமும். எவ்வனத்தை - இளமையை.

142. காஞ்சி உடையவரே - காஞ்சிபுரமாகிய பதியை உடையவரே. காஞ்சி உடை - மேகலையையும் ஆடையையும்.

142—3. வாஞ்சைக் கரவு அலையீர் - அன்பை ஒளித்தலாகிய செயலைச் செய்யீர்.

143. கரவளை - கையிலுள்ள வளை.

144. எற்பு அணியும் அக்குணத்தீர் - எலும்பை ஆபரணமாக அணியும் இயல்பு உடையீர். பொற்பணியை - பொன்னாலாகிய ஆபரணங்களை.

145. ஆர்க்குவதம் - கொன்றை மாலையை. நீர் அருள்வது அங்கு ஆர்க்கு. வதணும்புயத்தீர் : விளி.

146. நாண்மதி - ஒரு நாளே வளர்ந்த பிறை; நாண்மதி - நாணத்தையும் மதியையும். நாண் இக்கு - நாணோடு சேர்ந்த கரும்பாகிய.

147. சாபம் - வில். கொண்டவனை - மன்மதனை. மெய்யான சாபத்தை இட்டு.

தூண்டா விளக்கனைய சோதிப் பிரானழகை
வேண்டுமட்டுங் கண்ணால் விழுங்குவார்—ஆண்டவனே

எப்போ திரங்குவீ ரென்பா ரிரங்கிவிடின்
தப்பாமோ நும்பெருமை தானென்பார்-இப்படியாய்த்

தேங்கமழும் பூங்குழலார் செப்பிவிரு பாலுமுறப்
பாங்கியர்க ளெல்லாம் பரிவெய்த—ஆங்கொருத்தி

## பேதை

எண்சுவையுந் தோற்று மியற்சுவைபோற் கொண்டாடும்
பெண்சுவையாள் பேதைப் பிராயத்தாள்—கண்சுவையாய்ச்

சிற்றி லிழைத்துச் சிறுசோ றடுவாள்போற்
கற்றி லொழுக்கமெல்லாங் கைக்கொள்வாள்—மற்றறிவில்

பேதையர்போ லன்றிப் பெருந்தகைமை யுள்ளுறுத்த
கோதி லமுத குணத்தினாள்—காதரஞ்சேர்

ஆல முருத வராப்பணம்போ லல்குலாள்
நூலனைய சிற்றிடைநோ ஞதென்றே—சாலப்

பெரியோர் தவம்பிழைக்கு மென்றே பிறப்பில்
உரியோ ருடைவரென வோர்ந்தோ—தெரியாது

மந்தரவெற் பின்முயல வல்லோன்கைச் செப்பிலுறை
பந்தின் மறைந்த பயோதரத்தாள்—சந்தமலர்

---

151. எண் சுவை-உவகை முதலிய எட்டுச் சுவைகள். இயற் சுவை-அவைகள் எல்லாம் தோற்றும் சாந்தச் சுவை.

152. இல் ஒழுக்கமெல்லாம் கற்று.

153. உள்ளுறுத்த-உள்ளிட்ட. காதரம்-அச்சம்.

154. அராப்பணம்-பாம்பின் படம். நோனுது-பொருது.

155. பிறப்பில் உரியோர்-பெண் பிறப்பாகிய உரிமை உடையவர்கள்; பிற பெண்கள். உடைவர்-தோற்றுப்போவார்கள்.

156. மந்தர வெற்பின் முயல-பருவம் வந்தபோது மந்தர மலையைப் போலச் செயல் புரிய. வல்லோன்-செப்பிடு வித்தைக் காரன். பந்தின்-பந்தைப் போல. பயோதரம்-நகில்.

வாரிமுடியா மலர்க்குழலாள் மையறரு
வேரி யுருவதர விம்பத்தாள்—நாரியர்கள்

கொண்டாட லன்றிக் கொழுநருளங் கொள்ளாத
ஒண்டொடியாள் சூளு முரைசெய்யாள்—கெண்டையங்கண்

நோக்க மிருநோக்க நோக்காதா ளாடவரை
ஏக்கழுத்தஞ் செய்யாத வின்னுரையாள்—வாக்கிளைய

நாப்பயிலும் பூப்புலவர் நற்கவிபோற் சொற்பொருள்கள்
ஏற்ப முடியாத வேந்திழையாள்—வாய்ப்பவே

கத்தூரி சாத்திக் கமழ்பட் டெடுத்துடுத்து
முத்தணிந்து முல்லை முகையவிழும்—கொத்தணிந்து

பொன்னரியா மாலைகைக் கொண்டுபுறம் போதரலும்
அன்னமே யார்க்கணிவா யென்றொருத்தி—பன்னுதலும்

எல்லா வுயிர்க்கு முயிரா யெமையாள
வல்லான் குலசை வளர்கடவுள்—நல்லாய்கேள்

பாலவிழிக் கச்சிகொண்ட பாண்டீசர்க் கென்றுளவ்
வேலையிலே யெம்மான் விடைதோன்றக்—கோலத்

தெழினோக்கிக் கைதொழுதா ளிம்முறைமை நோக்காள்
வழிநோக்கி னுண்மதன னூற்குப்—பழியார்க்கும்

---

157. வேரி-தேன். அதர விம்பத்தாள்-கோவைப்பழம் போன்ற இதழை உடையாள்.

158. கொழுநர்-கணவராகிய ஆடவர்கள்.

159. ஏக்கழுத்தம்-தலையெடுப்பு.

159-60. வாக்கு இளைய நாப்பயிலும் பூப்புலவர்-முதிராத வாக்கையுடைய பூமியிலுள்ள இளம் புலவர்.

162. பொன் அரி ஆம் மாலை.

164. பாலவிழி-நெற்றிக் கண்ணைக் கொண்ட.

165. மதனன் நூற்குப் பழி ஆர்க்கும்-காமன் நூலுக்குப் பழியைச் சேர்ப்பிக்கும்; என்றது காமநூல் இவளிடம் பயன் பெறாது என்றபடி.

பூங்குழலா ளாங்ககலப் பொற்கொடிபோற் பொற்பினள்
தேங்கொள் கமலத் திருவன்னாள்—பாங்கார்

## பெதும்பை

பெதும்பைப் பிராயம் பிரியாதாள் சொல்லும்
அதும்புங் கடலமுத மன்னாள்—விதம்பெறவே

சித்திரித்த தெய்வ வுருவா ளிளைஞர்பாற்
பத்திசெய்யுஞ் சாயற் பசுங்கிள்ளை—நத்தனைய

கந்தரத்தாண் மஞ்ஞைக் கவின்சேருஞ் சாயலாள்
சிந்துரந் தீட்டுந் திருநுதலாள்—கொந்தளப்பொன்

ஓலை யணிகாதி லொண்கொப்புச் செஞ்சுடர்கள்
போல வணிந்த பொலங்கலத்தாள்—நீல

விடமு மமிர்தும் விரவ விரவிக்
கடலுவர்த்துக் காமர்க் கிலாத—உடலிதுவென்

றுடவர்க ளுன்னநிறை யஞ்சனஞ்சேர் வேல்விழியாள்
ஏடவிழும் பூங்கொத் தெழிற்சுட்டி— ஆடகத்தால்

---

167. சொல் அமுதமன்னாள். அதும்பும்-ஒலிக்கும்.

168. நத்து அனைய-சங்கைப் போன்ற.

169. கந்தரத்தாள்-கழுத்தை உடையவள். சாயல்-மென்மை. சிந்துரம்-குங்குமம்.

169-70. கொந்தளக் காது, பொன் ஓலை அணி காது எனக் கூட்டுக; கொந்தளக் காது-கூந்தலோடு ஒட்டித் தோன்றும் காது.

171. உவர்த்து-வெறுத்து; என்றது கடலைவிட அகன்றது என்றபடி. காமர்க்கு இலாத உடல் இது-மன்மதனுக்கு இல்லாமற் போன கரிய மேனியே இது.

171-2. விரவி, உவர்த்து, உன்ன, சேர் விழியாள் என்று கூட்டுக.

172. ஏடு-மலரிதழ். ஆடகம்-பொன்.

செய்ததலைக் கோலஞ் சிறந்தகுழற் காரிருளைப்
பைய வகற்றப் பதிவிருந்த—மையறுசீர்த்

திங்க ளெனுமுகத்தாள் செந்துவரு முத்தமும்
தங்கிய வாம்பற் றனிவாயாள்—சங்கனைய

கண்டத்திற் சாந்தணிந்து கைக்கு வளைபூட்டித்
துண்டத்தின் மூக்குத்தி தோற்றுவித்துக்—கெண்டையங்கட்

கஞ்சனமுஞ் சாத்தி யணிகிளரும் பூங்கச்சைக்
கஞ்சமுகைக் கொங்கைக் கலங்கரித்து—நெஞ்சகத்தில்

உண்மை மறையிரண்டி லொன்றுதுணி வொண்ணாத
வண்மையிடை பட்டான் மறைப்பித்துக்—கண்ணெகிழாக்

கிண்கிணி தாட்கணிந்து கேயூரந் தோட்பூட்டிப்
பண்கிளரு மேகலையும் பாரித்து—விண்கவின்செய்

தாரகைசூழ் மேருத் துணைபோற்றண் முத்துவடம்
வாரார் முலைமேன் மகிழ்ந்தணிந்து—நேராய

தோழியர்க டற்சூழச் சோலைமலி பூங்காவிற்
பாலனைய சொல்லாள்பந் தாடுதலும்—மாலுக்கும்

---

*172-3.* பூங்கொத்தும் சுட்டியும் தலைக்கோலமும் சிறந்த குழல். குழலாகிய கரிய இருளை.

*173.* பதிவிருந்த-பதுங்கி இருந்த.

*174.* செந்துவரும் - செம்மையான பவளமும். பவளம் இதழுக்கும், முத்தம் பல்லுக்கும், ஆம்பல் வாய்க்கும் உவமை.

*175.* துண்டத்தில்-மூக்கில்.

*176.* கஞ்சமுகை-தாமரை அரும்பைப் போன்ற.

*177.* உள்ள தன்மை, இல்லாத இரகசியம் என்ற இரண்டில் இதுதான் என்று ஒன்றைத் துணிய ஒண்ணாத இடை. கண்-பூட்டும் இடம்.

*178.* கேயூரம்-தோள்வளை.

*180.* தற்சூழ-தன்னைச் சுற்றியிருக்க.

மாலளிப்பான் வந்தான் மலரயற்கு மேலான
ஆலமுண்ட பெம்மா னணைந்தானென்—ருேலமிடும்

சின்னத்தி ேனாசை செவிவார்ப்பச் சென்ருேடிப்
பொன்னொத்த கொன்றையனைப் போற்றினள்—மின்னொத்த

இட்டிடையிற் பூந்துகிலு மேரார் மணிவண்டும்
விட்டறிவு நாண்டோற்று மெய்விதிர்த்தாள்—வட்டமுலை

## மங்கை

மங்கைப் பிராய மருவியதோர் மானனையாள்
பங்கயமும் பாதிச் சிறுமதியும்—துங்கமலி

நற்காம ரூபி கவிர்முல்லை நாளாம்பல்
ஒக்க வமைத்தமதி யொன்றென்ன—எக்காலும்

செந்தமிழோர் கட்டுரைக்குந் தெய்வத் திருமுகத்தாள்
கந்துகத்தைச் செற்ற கவின்முலையாள்—சந்தமலர்ச்

சூற்கொண்ட கொண்மூச் சுரிகுழலாள் சொல்லினல்
பாற்சுவையுங் கீழ்ப்படுத்தும் பைந்தொடியாள்—காற்றுணைக்குச்

செம்பஞ் செழுதிச் சிலம்பு கலந்தொலிப்பக்
கொம்பன்ன நுண்ணிடையிற் கோசிகத்தைப்—பம்ப

அலங்கரித்துக் கச்சிறுக்கி யாரம் புனைந்து
புலம்புமணி மேகலையும் பூட்டி—இலங்குமணிச்

---

*181.* மால்-காதல்.

*183.* இட்டிடை-இடுகிய இடை. வண்டு-கைவளை. அறிவும் நாணும்; உம்மைத் தொகை.

*185.* கவிர்-முள்ளு முருங்கைப் பூ. கவிர் இதழுக்கும், முல்லை பல்லுக்கும், ஆம்பல் வாய்க்கும் ஒப்பு.

*186.* கந்துகத்தை-பந்தை.

*187.* கொண்மூ-மேகத்தைப் போன்ற.

*188.* கோசிகத்தை-பட்டாடையை. பம்ப-பரவ.

*189.* ஆரம்-முத்துமாலை. புலம்பும்-ஒலிக்கும்.

சூடகமுங் கங்கணமுந் தோள்வளையும் பூட்டியபின்
பாடகமுந் தாண்மேற் பரிபுரமும்—ஆடகத்தால்

செய்தபணி யெல்லாஞ் சிறக்க வணிந்துதரத்
தையலர்க ளோடுந் தனியிருந்து—பைய

மிழற்றுகிள்ளை யோடு வியந்துரைக்கு மேல்வை
அழற்படைய மூவிலைவே லண்ணல்—தொழப்பவனி

வந்தான்வந் தானென்று வண்சின்னம் வாழ்த்தெடுப்ப
அந்தர துந்துமிக ளார்ப்பொலிப்பச்—சந்ததமும்

பாற்கடலிற் றோன்றும் பருதியு மப்பருதி
மேற்பிறங்கு வெண்மதியும் வெல்லவே—நாற்பதமும்

வேத வடிவான வெள்விடைமேல் வெண்குடைக்கீழ்ச்
சோதிச் சடாமவுலி தோன்றுதலும்—நாதனே

என்றென் றுருகி யிடைநுடங்க மெய்வியர்ப்பத்
தன்றுணையில் லாத தனிக்கொடிபோல்—நின்று

துவண்டு துவண்டு சுருண்டு சுருண்டு
கவன்ற மனத்தாற் கழறி—அவன்றுரைக்

கொள்ளைகொண்டாள் போற்சுணங்கு பூத்துக் குலக்கொழுந்து
பள்ளமடை போலுருகிப் பாங்ககன்றாள்-ஒள்ளியாள்

---

190. சூடகம்-கைவளை. பாடகம்-காலணி. பரிபுரம்-சிலம்பு ஆடகம்-பொன்.

191. அணிந்து தர-அணிய.

192. ஏல்வை-சமயத்தில்.

194-5. தன்னுடைய நான்கு கால்களும் நான்கு வேதங்களாக அமைந்த இடபம். வெண் குடைக்கு மதியும் மவுலிக்குப் பருதியும் உவமை. சூரிய மண்டலத்துக்கு மேற்பட்டது சந்திர மண்டலமென்பது புராணச் செய்தி.

198. சுணங்கு-பசலை. இது காம மிகுதியால் வரும் நிறம்.

## மடந்தை

மற்றொருத்தி பொற்பார் மடந்தைப் பிராயத்தாள்
கற்றவர்க்குங் காமநூல் கற்பிப்பாள்—வெற்றிமதன்

சேனைக்கு வாய்த்த திருவீர லட்சுமியாள்
மானொத்த வஞ்ச மதர்விழியாம்—பானற்பூப்

பூங்குமிழ் தொண்டை புணர்முத்தம் பொன்னூசல்
வாங்குவிற் சாணை வளர்மதியம்—ஓங்கிய

கோணமும் பாலிகையுங் கோதின் மணிநகையும்
பூணணியுங் காதும் புரூரமும்—மாணமைந்த

கஞ்சனை போன்ற கபோலத் துணையிரண்டும்
வஞ்சமில்லா வானனமு மாய்வயங்க—மஞ்சனைய

கூந்தற்கு வெண்மலர்கள் கொண்டணிந்த தோற்றமறல்
பாய்ந்ததிரண் முத்தப் பரப்பொப்பச்—சாந்தணிந்து

குங்குமந் தோய்ந்த குவிமுலைகள் கோங்ககற்றிப்
பங்கயத்தின் செவ்வியாய்ப் பாரிப்ப—மங்கலநாண்

---

200. பானற்பூ-கருங்குவளை மலர்.

201. பூங்குமிழ்-குமிழம்பூ. தொண்டை-கோவைப் பழம். சாணை-சாணையிடுங்கல்.

202. கோணம்-மூக்கு. பாலிகை-இதழ். நகை-பல். புரூரம்-புருவம்.

203. கஞ்சனை-கண்ணாடி. கபோலம்-கன்னம். ஆனனம்-முகம். மஞ்சு-மேகம்.

200-03. பானற்பூ வயங்க, குமிழ் முதலியனவாக வயங்க எனக் கூட்டுக. குமிழ் மூக்குக்கும், கொவ்வை இதழுக்கும், முத்தம் பல்லுக்கும், ஊசல் காதுக்கும், வில் புருவத்துக்கும், சாணைக்கல் கபோலத்துக்கும், மதியம் முகத்துக்கும் முறையே உவமைகள்.

204. அறல்-கருமணல். கூந்தலுக்குக் கருமணலும், வெண் மலர்களுக்கு முத்தப் பரப்பும் உவமை.

205. பங்கயத்தின் செவ்வியாய்-தாமரை அரும்பின் பருவத்தை உடையனவாய். பாரிப்ப-விளங்க.

தோய்ந்தகளம் பூங்கமுகின் ரேற்றந் தரவிணைத்தோள்
வாய்ந்த மணிக்கிளையின் வண்மைத்தாப்—பாந்தட்

கடிதடத்திற் செம்பட் டுடுத்தரைநாண் கட்டி
அடியிணைகட் கம்பொன் குயின்ற—வடிவுடைய

பாதசரந் தண்டை சதங்கை பயில்வித்துச்
சீதமுத்து மாலை தெரிந்தணிந்து—மாதரார்

கைதொட் டமைத்த களபவண்டன் மட்டித்து
மையிட்டு வாட்க ணலங்கரித்துப்—பொய்யிட்ட

சிற்றிடையார் சூழத் திருந்தமளி மேலிருந்து
வெற்றியா ழங்கே விரித்தேந்தி—மற்றுமோர்

வீணையிசை கூட்டி விமலை யொருபாகன்
தாணுவின்மேற் செந்தமிழாற் சந்தவிசை—ஏணவிழப்

பாடிய வெல்லை பரமன் சடாதாரி
நாடரிய மால்விடைமே னண்ணுதலும்—மாடகயாழ்

கைவிட்டு வாயிற் கடைகழிந்து கண்ணுதலை
நெய்விட்ட கூந்தலா ணேர்தொழுதாள்—மெய்விட்டுக்

கண்முத்துந் தார்முத்துஞ் சிந்தக் கலைகலைய
எண்முத்தஞ் சேர்ந்த விதழ்துடிப்ப—வண்ணப்பூ

---

206. களம்-கழுத்து. மணிக்கிளை-முத்தைத் தரும் மூங்கில்.

206-7. பாந்தட் கடிதடம் - பாம்பைப் போன்ற இரகசிய ஸ்தானம்.

209. களபவண்டல்-கலவைச் சந்தனக் குழம்பை. பொய் யிட்ட - பொய்யின் தன்மை அமைந்த; பொய்யோ என ஐயுறும்படி அமைந்த என்றபடி.

210. அமளி-இருக்கை.

211. தாணு-சிவபெருமான். ஏண்-பெருமை.

212. மாடகம்-முறுக்காணி,

214. கண்முத்து-கண்ணீர்த்துளி. கலை-ஆடை. முத்தம் என்றது பல்லை.

மேனி விதிர்ப்பமொழி விம்மப் பரவசமாய்க்
கானிவரும் பூங்கொன்றை கைக்கொண்டாள்—மானெருத்தி

## அரிவை

ஆயிழையார் போற்று மரிவைப் பிராயத்தாள்
பாயொளிசேர் பங்கயமு நீலமும்—வாய்விரியும்

ஆம்பலுஞ் செங்கிடையுஞ் சைவலமு முண்மையால்
தேம்புணரும் பூம்பழனச் செவ்வியாள்—காம்பிணையும்

வெற்பும் விடவரவும் நீர்ச்சுனையு முண்மையாற்
பொற்பார் குறிஞ்சித் திணைபோன்றாள்—கற்பரும்பும்

பூங்குமிழுங் கொவ்வையு முண்மையால் போதலர்ந்து
தேங்கமழு முல்லைத் திறம்போன்றாள்—வான்றிறல்சேர்

பஞ்சா னனமும் பகைத்துடியுங் காளையர்கள்
நெஞ்சம் பதைத்தழிய நேர்நின்று—வஞ்சகமாய்ப்

பற்பகல்கொள் சூறையு முண்மையாற் பாலையெனும்
சொற்பொலியு நற்றிணையாய்த் தோன்றினாள்—விற்பொலியும்

---

215. விதிர்ப்ப-நடுங்க. கான்-நறுமணம். கொன்றை கைக்கொண்டாள் என்றது பசலை நிறம் பெற்றாள் என்றபடி.

217. கிடை-நெட்டி. சைவலம்-பாசி. காம்பு-மூங்கில். பழனச் செவ்வியாள்-மருத நிலம் போன்ற அழகை உடையவள்.

216—7. பங்கயம் போன்ற முகமும் நீலமலர் போன்ற கண்ணும் ஆம்பலைப் போன்ற வாயும் செங்கிடையைப் போன்ற இதழும் சைவலத்தைப் போன்ற கூந்தலும் உடைமையின் பழனம் போன்றவள் என்கின்றார்.

218. வெற்பு நகிலுக்கும், அரவு பெண்ணுறுப்புக்கும், சுனை கொப்பூழுக்கும் உவமைகள். கற்பு அரும்பு-முல்லை அரும்பு.

218—9. முல்லை அரும்பு பல்லுக்கும் குமிழ் மூக்கிற்கும் கொவ்வை இதழுக்கும் உவமைகள்.

220. பஞ்சானனம்-சிங்கம். துடி-உடுக்கை.

221. சூறை-சூறையிடுந் தன்மை. வில்-ஒளி.

220—21. சிங்கமும் உடுக்கையும் இடைக்கு உவமைகள்.

வித்துருமஞ் சங்க மிளிர்தவள வெண்முத்தம்
ஒத்த கயலினமு முண்மையால்—நத்தூரும்

நெய்தலே போல்வா ணெறித்த கருங்குழலாள்
கொய்தளிர்ச்செம் மேனிப்பூங் கொம்பனையாள்—வையகத்தை

அல்குலால் வென்று ளரைநாண் கலைதிருத்தித்
தொய்யின்மேற் பூந்தொத்துச் சூழ்தந்து—தையலாள்

சந்தனத்தின் மட்டித்துச் சாந்தங் குழைத்தணிந்து
கந்த மலரலங்கல் கைபுனைந்து—செந்தழலின்

மின்னுமணி யாபரண வெய்யிலிருள் கால்சீப்ப
அன்ன மனையா ரலங்கரிப்பப்—பொன்னனையார்

கூட விருந்து குரல்விளரி கொண்டிசைக்கும்
மாடகயாழ் வாங்கியிசை வாசிப்பத்—தோடவிழும்

ஆர்க்குவதம் பூண்ட வழக னணிவிடைமேற்
கார்க்குவளைக் கண்ணு ளொடுங்கலந்து—பார்க்கெல்லாம்

போகமுத்தி தந்து புரக்க வெழுந்தருளும்
வாகனத்திற் பூண்ட மணியேறுண்—டாகம்

---

222. வித்துருமம் - பவளம். தவள வெண்முத்தம்-மிக்க வெண்மையான முத்து. பவளம் இதழுக்கும், சங்கம் கழுத்துக்கும், முத்துப் பல்லுக்கும், கயல் கண்ணுக்கும் உவமைகள். நத்து-சங்கு.

224. தொய்யில்-சந்தனம் முதலியவற்றால் மேனியில் எழுதும் கோலம்.

225. சந்தனத்தின் மட்டித்து - சந்தனக் கட்டையால் அரைத்து.

226. கால்சீப்ப-போக்க.

227. விளரி - ஓர் பண்.

228. ஆர்க்குவதம்-கொன்றை மலர்.

229. போகமும் முத்தியும். மணியேறுண்டு-மணி ஓசையால் எறியுண்டு.

குழைந்துமறு கூடேகிக் கோலமணித் தேர்முன்
விழுந்தெழுந்து விம்மிதமாய் நின்று—தொழுந்தகையாள்

அன்னைமீர்க் கெல்லாம் புராரி யெனதளவும்
கன்னற் சிலைக்களித்த கையாளன்—என்ன

மிழற்றுமலர்க் கூந்தல் விரிக்கு முடிக்கும்
இழக்குங் கலைதிருத்து மேங்கும்—பழஞ்சுவையும்

கந்தமும் பூவு மெனக்கலந்த காட்சியாள்
சிந்தை யவிழ்ந்து திகைத்தொழிந்தாள்—இந்த

## தெரிவை

அரிவைப் பதம்பிரியா வந்நலார் போற்றும்
தெரிவைப் பிராயத்துச் சேயிழையாள்—வரிவண்டார்

காரிருளி னாலே கடக்களிறுங் கட்டுரையாற்
சார வரும்பரியும் தாபித்தே—ஏர்மருவும்

முத்த நகையின் முகமதியின் மான்விழியின்
வைத்தகணை யாயம் மருவியே—வித்தகமாம்

---

231. அன்னையராகிய உங்களுக்கெல்லாம் திரிபுர சங்காரனாக இருப்பவன் என்னளவும் கரும்புவில்லைக் கையிற் கொண்ட மன்மதனாக இருக்கிறான்.

232. பழஞ் சுவையும்-பழமும் சுவையும்; செய்யுள் விகாரம்.

233. கந்தம்-நறுமணம்.

234. பதம்-பருவம், அந்நலார்-பெண்கள்.

234-5. வண்டார் காரிருள் என்றது கூந்தலை. கூந்தல் என்னும் இருட்டினாலே மன்மதனின் களிறாகிய இருளையும், தன் சொல்லினால் அவன் குதிரையாகிய கிளியையும் நிலை நிறுத்தினாள்.

236. முத்துப் போன்ற பல்லினால் முல்லையரும்பாகிய கணையையும், முகமாகிய மதியினால் தாமரையாகிய அம்பையும், மான் போன்ற விழியினால் குவளையாகிய அம்பையும் பொருந்தியவள் என்றபடி. கணை ஆயம்-அம்புக் கூட்டம்.

மேனிதனு வத்தாணி மெல்லியவல் குற்றடமாய்
வானிவருங் கேதனமுன் கைவடிவாய்—ஞான

விழியழலான் மாயும் வியன்மதன ஞகம்
அழியா திருத்து மழகாள்—எழிலாரும்

பாதலத்தி னின்றெழுந்த பையரா வந்தரத்தின்
மீதேறி மேரு முடிமறைத்த—நீதிதர

உந்தி யெழுந்த வுரோமவல்லி யோடொன்றிப்
பந்தித்த கச்சின் பணைமுலையாள்—வந்திக்கும்

இந்து வமுதந் துளித்தாங் கெழின்முகத்தின்
முந்தவொளிர் கோணத்தோர் முத்தினள்—சந்ததமும்

அவ்வமுத முண்ண வரும்புலவர் போலயலே
செவ்விதரு மாரத் திரள்வடத்தாள்—கொவ்வை

இதழமுத மாருத வேரா னனத்தாற்
சிதைவு படமதியைச் செய்வாள்—விதவிதமாய்ப்

---

237. கரும்பு போன்ற மேனியால் மன்மதன் வில்லையும், அல்குற்றடத்தால் அத்தாணியையும், முன் கையினல் மகரமாகிய கேதனத்தையும் தோற்றும்படி செய்தாள். தனு-வில். அத்தாணி-ஆஸ்தான பீடம். கேதனம்-கொடி.

235-8. மதனன் உடம்பு அழிந்தாலும் தன்னுடைய அங்கங்களால் களிறு முதலியவற்றை அழியாமல் வைக்கின்ற அழகை உடையவள்.

239-40. உந்திக்குப் பாதலமும், மயிர் ஒழுங்குக்குப் பாம்பின் உடலும், கச்சுக்கு அதன் படமும், நகிலுக்கு மேருவும் உவமைகள். ரோமவல்லி - மயிர் ஒழுங்கு. பந்தித்த-கட்டிய. வந்திக்கும்-வணங்கும்.

241. இந்து-சந்திரன். கோணத்து-மூக்கில். ஓர் முத்து என்றது புல்லாக்கில் உள்ள முத்து. முகத்துக்குச் சந்திரனும் முத்துக்கு அமுதத் துளியும் உவமை.

242. புலவர்-தேவர். ஆரத் திரள் வடத்தாள்-திரண்ட முத்துமாலையை அணிந்தவள்.

243. மதியைச் சிதைவுபடச் செய்வாள்

பட்டெடுத்துச் சூழ்ந்து பரும வணிபுனைந்து
கட்டழகின் மேலழகாய்க் கண்களிப்ப—வட்டமிடும்

பூந்தார் அணிந்து புனைசந்த மட்டித்துச்
சாந்தந் திமிர்ந்து தவத்தோர்க்கும்—வாய்ந்தவுளம்

பற்றிப் பிரியாத பண்பினுள் செய்குன்றின்
முற்றிழையா ரோடு முறுவல்செய்து—கற்றையந்

தோகை மயிலாடல் கண்டுதுணர்ப் பூக்கொய்து
பாகுண்டு வல்லுப் பரப்பியதில்—மோகமாய்

ஆடும் பொழுதி லரனரண் மூன்றெரித்துக்
கூடலரைச் செற்றபிரான் கொல்லேற்றான்—ஏடவிழ்பூங்

கொன்றை யணிந்த குழகன் வரும்பவனி
இன்றுணையா மாதரார் வந்திசைப்பத்—தன்றெழிலாம்

கோட்டி யொழிந்து விரைந்து குலமடந்தை
தாட்டுணைப் பூங்கமலந் தாழ்ந்திறைஞ்சி—நாட்டார்கள்

காணவே வண்டுங் கலையு மடியுறையாய்
நாணும விட்டு நலந்தோற்றாள்—மாணமைந்த

## பேரிளம்பெண்

முற்றிய தெய்வக் கனிபோன் முதுக்குறைந்த
பெற்றிமைசேர் பேரிளம் பெண்மையாள்—கற்றுத்

---

244. பரும அணி-மேகலையாகிய ஆபரணம்.

245. சந்தம் மட்டித்து-சந்தனக் கட்டையை அரைத்து.

247. துணர்-கொத்து. பாகுண்டு-தாம்பூலந்தரித்து. வல்லுப் பரப்பி - சூதுகாய்களைப் பரப்பி.

248. அரண்மூன்று-திரிபுரங்கள். கூடலர்-பகைவர்.

249. குழகன்-இளமையை உடையான்.

250. கோட்டி-கூட்டம். குலமடந்தை—அம்பிகை.

251. வண்டு-வளை. கலை-ஆடை. அடியுறை - பாத காணிக்கை.

திருந்தினர்க்கே நல்லமுதாய்ச் சேர்வாளல் லார்க்கு
வருந்த வணங்காய் வதிவாள்—கருந்தடங்கண்

அம்பரத்தை யுண்பா னயலிறங்குங் கார்க்குழுப்போற்
பம்பிவளர் கேசப் பரப்பினாள்—வம்புலாம்

கூந்த லயலணிந்த வாரவடங் கொண்மூவும்
வாய்ந்த வதன்றுளியு மாய்வயங்கச்—சாந்தத்

திலகம் பருதிபொரத் திங்களிடை வான்மீன்
உலவுவது போன்முத் தொளிரச்—சலசத்தில்

நித்திலமே யன்றியிரு நீல நிரைப்பவளம்
வைத்தன போலு மலர்முகத்தாள்—சித்தசன்போர்

வென்றூதும் வெற்றி வியன்சங்கம் போற்களத்தாள்
மன்றற் களபம் வனைந்ததன்மேல்—ஒன்றவணி

கச்சறுத்து விம்மிக் கதிர்த்திறுமாந் தாடவரை
அச்சுறுத்துங் கொங்கை யமுதகடம்—வெச்செனவும்

தண்ணெனவுங் காட்டித் தனக்குவமை யில்லாத
பெண்ணரசுக் காமகுடம் போற்பிறங்க—வண்ணவளை

முன்கைக் கணிந்து முதாரிகட கம்பூண்டு
தங்கத்திற் றண்டை சதங்கையிட்டுப்—பொங்கொளிசேர்

---

253. அணங்காய்-துன்பந்தரும் தெய்வமாய்.

253—4. கண்ணாகிய கடலை உண்பதற்கு. கூந்தலுக்கு மேகம். வம்பு-நறுமணம்.

255. ஆரவடம்-முத்து மாலை. கொண்மூ-மேகம்.

256—7. முகத்துக்குத் தாமரையும் பல்லுக்கு நித்திலமும் கண்ணுக்கு நீலமலரும் இதழுக்குப் பவளமும் உவமைகள். நிரைப் பவளம்-வரிசையாகிய பவளம். சித்தசன்-மன்மதன்.

258. களத்தாள்-கழுத்தை உடையவள், மன்றல்-மணம். களபம்-கலவைச் சந்தனம்.

259. அமுதகடம்-அமுதம் நிறைந்த குடம். வெச்செனவும்-வெம்மையாகவும்.

260. தண் எனவும்-தண்மையாகவும். பெண் அரசுக்கு ஆம் மகுடம்போல்.

261. முதாரி-முன்கையில் அணியும் ஒருவகை வளை.

பன்மணியாற் செய்த பரும மரைக்கசைத்து
வன்னப்பூம் பட்டுடுத்து மையெழுதி—மின்னொளிசேர்

பொற்கலன்க ளெல்லா மவயவந்தோ றும்புனைந்து
பற்பலரா மங்கையர்கள் பாங்கிருப்பப்—பொற்கவரி

கொந்தளத்தின் மீதேற வீசல் குணகடலின்
வந்துதித்த வெண்டரங்கம் போல்வயங்கச்—சந்தனப்பூங்

காவி னடுவண் கதிர்ப்படிகங் கொண்டிழைத்த
ஓவிய மண்டபத்தி னொண்ணுதலார்—மேவிவைத்த

சிங்கஞ் சுமந்த திருந்தமளி மேலேறிப்
பங்கயப்பூம் பாவையன்னாள் பண்ணமைந்த—மங்களமாம்

மூவ ரொருவர் பலரொருவர் முன்னோர்கள்
யாவர் செழுந்தமிழு மேத்தெடுத்துத்—தேவன்

சிவனிறைவன் கச்சிகொண்ட பாண்டீசன் சேர்ந்தார்
பவமகலச் செய்யும் பரமன்—தவம்வளர்த்த

மங்கையிடங் கொண்ட வரதன் வரதனென்றென்
றங்கங் குளிர்ந்திருக்கு மவ்வேலை—சங்கமொடு

சின்னங்கள் பேரி தடாரி திசைதிசையே
மன்னுமொலி கேட்டு மகிழ்வெய்தி—அன்னைமீர்

---

262. பருமம்-18 வடங்கள் கொண்ட மேகலை. அரைக்கு அசைத்து-இடையில் கட்டி.

264. கொந்தளம்-கூந்தல்.

263—4. கூந்தலுக்குக் கரிய கடலும் கவரிக்கு அலையும் உவமை.

265. படிகம்-பளிங்கு.

266. அமளி-ஆதனம்.

267. மூவர்-சம்பந்தர், அப்பர், சுந்தரர். ஒருவர்-மாணிக்க வாசகர். பலர்-திருவிசைப்பாப் பாடிய ஒன்பதின்மர். ஒருவர்-திருமூலர். முன்னோர்கள்-பதினோராந் திருமுறையில் உள்ள நூல்களைப் பாடியவர்கள். யாவர் செழுந்தமிழும்-12 திருமுறையி லுள்ள பாக்களையும்.

269. வரதன் வரதன்-வரதராஜனாகிய திருமாலுக்கு அருள் செய்தவன். வரதன் வரதன் என்றது அனைத்தும் ஒரு பெயராக நின்று, கொண்ட என்ற எச்சத்தின் முடிவாகி நின்றது.

யாமே தவஞ்செய்தே மென்றென் றுரைத்துவந்து
கோமறுகி லீசன் குலவிடைமேற்—சேமமுடன்

வீற்றிருக்குங் கோலம் விழிகுளிரக் கண்டவன்றாள்
போற்றி யிறையே பொலந்தொடியார்—மாற்றமெல்லாம்

செஞ்செவியிற் சேராமற் சேமித்தாய் மும்மைவிழிக்
கஞ்சத்தால் வவ்வுங் கருத்தெவன்சொல்—நஞ்சணிந்த

கண்டனே யென்று கசிந்தா ளகங்குழைந்தாள்
தொண்டை யிதழுந் துடிதுடிப்பக்—கொண்ட

புளகத்தார் வேர்வை பொறிப்ப வவிழ்ந்த
அளகத்தாண் மால்கொண் டகன்றாள்—உளமுற்று

வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோளென்னும்—பாட்டின்

பொருளுக் கிலக்கியமே போல்வார்க ளீசன்
அருள்போலு மாறா வழகார்—புரளும்

ஒருகுடங்கைக் கண்ணா ரொளிவளரு மார்பில்
இருகுடங்க ளேந்து மிடையார்—திருமகட்கும்

மாலாக்குங் கோமளஞ்சேர் மங்கைநல்லா ருள்ளமெல்லாம்
கோலா கலமாகக் கொள்ளைகொண்டு—வேலா

வலயஞ்சூழ் வீரை வளநாட்டிற் செல்வக்
குலசா புரியுறையுங் கோமான்—அலகில்

கருவிடைமேற் செல்லாமற் காட்சியளித் தியார்க்கும்
ஒருவிடைமேற் போந்தா னுலா.

---

271. கோமறுகு-அரச வீதி.

272—3. பெண்களுடைய வார்த்தைகளைக் காதிற் கேளாமல் உன்னுடைய தாமரை போன்ற மூன்று விழிகளால் அவர்களைக் கவர்கின்ற உன்னுடைய திருவுள்ளம் என்ன.

274. தொண்டை இதழ்-கோவைப் பழம் போன்ற உதடு.

275. புளகம்-மயிர்க்கூச்சு. அளகம்-கூந்தல்.

276. இக்கண்ணியில் ஒரு திருக்குறள் அமைந்துளது.

278. ஒரு குடங்கைக் கண்ணார்-உள்ளங்கை அளவு அகன்ற கண்களை உடையவர்கள்.

279. மால்-மயல், கோமளம்-மென்மை. வேலாவலயம்-கடல்.

281. கருவிடை-பிறப்பினிடையில், மேல்-இனிமேல்,



# மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடுகள்

## இலக்கியம்

| | | ரூ. | பை |
|---|---|---|---|
| 1. | கம்பராமாயணம்—பாலகாண்டம் விரிவுரையுடன் | 12 | 00 |
| 2. | ,, அயோத்தியா காண்டம் ,, பகுதி 1 | 12 | 00 |
| 3. | ,, ,, ,, ,, பகுதி 2 | 12 | 00 |
| 4. | ,, ஆரணிய காண்டம் ,, | 12 | 00 |
| 5. | ,, கிட்கிந்தா காண்டம் ,, | 12 | 00 |
| 6. | ,, சுந்தர காண்டம் ,, | 12 | 00 |
| 7. | ,, யுத்த காண்டம் ,, பகுதி 1 | 12 | 00 |
| 8. | ,, யுத்த காண்டம் ,, பகுதி 2 | 12 | 00 |
| 9. | ,, யுத்த காண்டம் ,, பகுதி 3 | 12 | 00 |
| 10. | ,, யுத்த காண்டம் ,, பகுதி 4 | 12 | 00 |
| 11. | ,, பால காண்டம் அரசியற் படலம் வரை | 2 | 00 |
| 12. | பெருங்கதை ஐயரவர்கள் வெளியீடு, 4ஆம் பதிப்பு | 16 | 00 |
| 13. | புறநானூறு ,, ஏழாம் பதிப்பு | 16 | 00 |
| 14. | தக்கயாகப் பரணி ,, நான்காம் பதிப்பு | அச்சில் | |
| 15. | சூளாமணி—குறிப்புரையுடன் | 12 | 00 |
| 16. | மூவருலா நான்காம் பதிப்பு | அச்சில் | |
| 17. | திருக்குற்றாலநாதர் உலா | 2 | 25 |
| 18. | தலசை உலா | 1 | 00 |
| 19. | கப்பற்கோவை—குறிப்புரையுடன் | 3 | 00 |

| | | ரூ. | பை |
|---|---|---|---|
| 20. | நளவெண்பா—விளக்கவுரையுடன் | 5 | 00 |
| 21. | திருக்குறள்—ஒரு பழைய உரையுடன் | 4 | 00 |
| 22. | அகிலாண்ட நாயகி மாலை—குறிப்புரையுடன் | 0 | 50 |
| 23. | சேக்கிழார் பிள்ளைத்தமிழ் ,, | 1 | 50 |
| 24. | தமிழ்ப்பா மஞ்சரி—ஐயரவர்களின் பாடல்கள் — பகுதி 1 | 1 | 50 |
| 25. | ,, ,, — பகுதி 2 | 2 | 50 |
| 26. | கயற்கண்ணி மாலை — அங்கயற்கண்ணி மாலை, கடம்பவன வல்லி பதிகம், ஸ்ரீ சுந்தரேசர் துதி என்பவற்றுடன் — ஐயரவர்கள் இயற்றியவை | 1 | 25 |

## இலக்கணம்

| | | | |
|---|---|---|---|
| 27. | நவநீதப் பாட்டியல் - மூலமும் உரையும் | 2 | 00 |
| 28. | யாப்பருங்கலக் காரிகை | 4 | 50 |

## சமயம்

| | | | |
|---|---|---|---|
| 29. | கமலாலயச் சிறப்பு — குறிப்புரையுடன் | 5 | 00 |
| 30. | திரு அம்பர்ப் புராணம் ,, | 5 | 00 |
| 31. | திருவாசக வியாக்யானம் — அநுபூதி உரை — பகுதி 1 | அச்சில் | |
| 32. | ,, ,, பகுதி 2 | அச்சில் | |

## கலைகள்

| | | | |
|---|---|---|---|
| 33. | பரத சேனாபதீயம் — நாட்டியம் | 1 | 2[illegible] |
| 34. | அபிநய தர்ப்பணம் — படங்களுடன் | 5 | 00 |
| 35. | மகா பரத சூடாமணி — பகுதி 1 — நாட்டியம் | 10 | 00 |
| 36. | ,, — பகுதி 2 — இசை | 5 | 62 |
| 37. | திருக்குற்றாலக் குறவஞ்சி | 1 | 25 |
| 38. | கும்பேசர் குறவஞ்சி | 1 | 50 |

ரூ. ந.பை.

## நீதி

| | | |
|---|---|---|
| 39. மநுவிஞ்ஞானேசுவரீயம் | 4 | 00 |

## உரை நடை

| | | |
|---|---|---|
| 40. மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் சரித்திரச் சுருக்கம் — பகுதி 1 | 3 | 00 |
| 41. மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் சரித்திரச் சுருக்கம் — பகுதி 2 | 2 | 25 |
| 42. ஐயரவர்கள் வாழ்க்கை வரலாறு | 0 | 10 |
| 43. ஐயரவர்களின் வாழ்க்கையும் செயற்கரிய செயலும் | 0 | 40 |
| 44. நன்மாணாக்கர் | 0 | 50 |

## சுவடிகளின் விளக்கம்

| | | |
|---|---|---|
| 45. சுவடிகளின் நாமாவளி | 0 | 37 |
| 46. சுவடிகளின் விளக்கம் — பகுதி 1 | அச்சில் | |
| 47. சுவடிகளின் விளக்கம் — பகுதி 2 | 10 | 00 |
| 48. ,, — பகுதி 3 | 10 | 00 |
| 49. ,, — பகுதி 4 | 10 | 00 |

# விற்பனை உரிமை பெற்ற தியாகராஜ விலாச வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 50. தமிழ்நெறி விளக்கம் | 1 | 00 |
| 51. பத்மகிரிநாதர் தென்றல்விடு தூது | 0 | 50 |
| 52. புகையிலைவிடு தூது | 0 | 25 |
| 53. அழகர் கிள்ளைவிடு தூது | 0 | 75 |
| 54. தமிழ்விடு தூது | 1 | 00 |
| 55. மான்விடு தூது | 0 | 62 |

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 56. | திரு இலஞ்சி முருகன் உலா | 0 | 62 |
| 57. | திருப்பூவணநாதர் உலா | 0 | 62 |
| 58. | திருக்காளத்திநாதர் உலா | 0 | 31 |
| 59. | தேவை உலா | 0 | 25 |
| 60. | விக்கிரம சோழன் உலா | 1 | 50 |
| 61. | தியாகராஜ லீலை | 0 | 75 |
| 62. | திருமலையாண்டவர் குறவஞ்சி | 0 | 37 |
| 63. | திருக்குற்றாலச் சிலேடை வெண்பா | 0 | 31 |
| 64. | நினைவு மஞ்சரி — பகுதி 1 | 1 | 50 |
| 65. | புதியதும் பழையதும் | 1 | 50 |
| 66. | நான் கண்டதும் கேட்டதும் | 0 | 62 |
| 67. | நல்லுரைக் கோவை — பகுதி 1 | 1 | 25 |
| 68. | ,, — பகுதி 2 | 1 | 25 |
| 69. | ,, — பகுதி 3 | 1 | 25 |
| 70. | ,, — பகுதி 4 | 1 | 25 |
| 71. | என் சரித்திரம் (சுருக்கம்) | 4 | 00 |
| 72. | மகா வைத்தியநாதையர் | 0 | 62 |

இந்த நூல்கள் தவிர, ஸ்ரீ தியாகராஜ விலாச வெளியீடுகளாகிய பிற நூல்களும் விற்பனைக்குக் கிடைக்கும்.

கம்பராமாயணம் முழுவதும் ஒரு சேர வாங்கினால் 25% கழிவு உண்டு.

ஏனைய புத்தகங்கள் ஒரே தடவையில் ரூபாய் பதினைந்துக்கு மேல் வாங்கினால் 20% கழிவு உண்டு.

பேக்கிங், தபாற் செலவு தனி.

விவரங்களுக்கு :

**மகா மகோபாத்தியாய**
**டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் நூல் நிலையம்,**
திருவான்மியூர், சென்னை, 600041
என்ற முகவரிக்கு எழுதுங்கள்.